# கல்கி

வைரவிழா ஆண்டு

KALKI 24.3.2002
ரூ. 6.00






## அட, அர்ச்சனா!

# Steelwin®

## THE RECLINER CHAIR




Imagine being able to do all this on one chair! Steelwin's amazing Recliner can change from chair to hammock to bed and everything in between, in a trice, at a gentle flick of the elegant arms rest. That's the Recliner. A chair that changes to suit your need.

---

**CHENNAI : Triveni & Co.** 5, Raja Street, T. Nagar, Chennai - 600 017. Ph: 4360111.

**Siva Sakthi Industries,** 100, Menambedu Road, SIDCO IND. ESTATE, AMBATTUR, Chennai - 98. Ph: 623 3957.

**BANGALORE : Steelwin,** 131, Devatha Plaza, Residency Road, Bangalore - 560 025. Ph: 080 - 2210541, 2221866

**DEALERS**

• **Purasawalkam :** ○ Sakthivel Enterprises, Ph: 6433556 • **Annanagar :** ○Carrefour, Ph:6210933. ○J.F.A, Ph: 6223377. National Furnitures, Ph:6212666, • **Annasalai :** ○Apollo chairs, Ph:8411960. ○Spencer & Co., Ph: 8523611. ○Chellarams, Ph: 858 3046 • **Royapettah High Road :** ○J.F.A., Ph: 813 1384.○Sathya Furniture Co. Pvt. Ltd., Ph: 4983929. ○ Cyber Cove Furniture Mart. Ph: 8207211. • **Ashok Nagar :** J.F.A. Ph: 3713493. • **Teynampet:** ○Imperial Furniture Co., Ph: 4349644. ○Kapsons, Ph:4339986. • **T.Nagar :** ○Fantasy Furniture Co., Ph : 8234420. ○Gunaa Marketing, Ph: 4340083. ○Muthu Furniture, Ph:4344193. ○New Gold House Foams & Furnishers, Ph: 8230375. ○Anush Furniture, Ph: 4338021. • **Lloyds Road :** ○Indroyal Furniture Co., Ph: 826 8966. • **Vadapalani:** ○Palve, Ph: 4840812. • **Egmore:** ○New Foam Palace, Ph : 8250688 • **Kilpauk :**○Seating World, Ph : 6444005 • **Adyar :** ○Deepak Furnitures, Ph: 4465625 ○Maruthi Decors, Ph: 4420783 • **Thiruvanmiyur :** ○Punyas Agencies, Ph: 4481520. ○Jayaraja Furniture, Ph: 4456315 • **Guindy:**○Cybercove Furniture Mart, Ph : 2322111 • **Nanganallur :** ○Balasubramaniam & Co., Ph: 2332425 • **Avadi :** ○Sri Lakshmi Agencies, Ph : 6551549 • **Thiruvottiur:**○Comfort Foams & Furniture, Ph : 5735849

**List of Dealers in Tamil Nadu**

• **Coimbatore:** Elite Furniture, Ph: 399122. Rexin Land, Ph:233240. Elite Furniture Mart, Ph:236662. Carrefour, Ph: 302303. • **Erode :** A.P. Thomas, Ph: 257471. • **Karaikudi :** Sree Laxmi & Sons, Ph:38286 • **Kumbakonam:** Standard Steel Furniture, Ph: 421846. Bismi Furniture, Ph: 425262. • **Madurai :** Sacs Enterprises, Pvt. Ltd., Ph: 536212. Sri Vinayakam Furniture, Ph: 746746. Sacs & Sons, Ph: 747656. • **Mayiladuthurai:** Bismi Furniture Pvt. Ltd., Ph: 22856. • **Nager Koil:** Rohith Furniture, Ph: 76955. • **Pudukottai:** Mumtaj Furniture Mart, Ph: 22060 • **Ramanathapuram:** Surya Home Applicants, Ph: 21009. • **Salem:** Millennium Neo Furm, Ph: 419145. • **Thanjavur:** Standard Steel Furniture, Ph: 31493. • **Tirunelveli:** Bright Furniture, Ph: 333028. • **Tirupur:** Woodland Furniture works, Ph: 425181. • **Trichy:** Cauveri Furniture, Ph: 764661 - Galaxy Wood House, Ph: 763551 - Vedham Furniture, Ph: 760433. • **Tuticorin:** Ganga Rajesh Furniture, Ph: 326245. • **Kovilpatty:** Bharath Furniture Super Market,Ph: 21258. • **Vellore :** T.P.G. & Sons, Ph : 20333. • **Sivakasi :** Bharath Agencies, Ph: 422789. • **Sankaran Kovil :** Rajesh Agencies, Ph:22410

**List of Dealers in Kerala**

• **Calicut:** ○Ruby Furniture Co., Ph: 721307 • **Cochin:** ○Diwaniya Associates, Ph:330888 ○Manuel Sons Exporters Pvt Ltd, Ph: 366742 ○Comfurn Furnitures & Interior Decorators, Ph : 345688 • **Thiruvananthapuram:** ○Marikar (Motors)Ltd., Ph: 477420 • **Trichur:** ○M.D. Francis & Sons, Ph:420613 ○M.D. Francis & Co., Ph: 212464 ○Furniture Plaza, Phone : 443453

**List of Dealers in Andhra Pradesh**

• **Hyderabad:** ○Furniture World, Ph: 3353708 ○ Om Prakash Iron Metal Works, Ph : 4602260 - ○Posh Living Furniture, Ph: 6661322 • **Nellore:** ○House Beauty Furniture, Ph: 326586 • **Secunderabad :** ○Aalishaan Furniture, Ph : 7844750 ○Linga Plaza, Ph:7744859 • **Visakhapatnam :** ○Wood Decor, Ph:706752 ○Wood Land, Ph: 552313 ○Buba's Furniture Furnishings, Ph: 516255 ○The Decograph Interiors, Ph: 530770 • **Vijayawada :**○Amulya Steel Wood Furnitures, Ph: 574584 ○Alankar Tubular Furniture Mfg.Co., Ph: 579725

**PONDICHERRY:** Bismi Furniture Pvt. Ltd., Ph: 346139. Sadhuram Industries, Ph: 338588.



# ஒரு கோடி Vs 99 கோடி!

காஞ்சி பெரியவரின் சமரச முயற்சிகளை மீறி, அயோத்தி பற்றி இரு தரப்பிலும் விட்டுக் கொண்டிருக்கும் உதார்கள் தேசத்தையே ஒரு விதமான காய்ச்சலில் ஆழ்த்தியுள்ளது. இந்தப் பிரச்னையில் அரசோ அல்லது மதத் தலைவர்களோ எந்தவிதமான தீர்வுக்கும் வரக்கூடாது என்று கருதிய சில 'நல்ல ஆத்மாக்கள்' இல்லாமல் இல்லை.

மத்திய அரசுக்குக் கிடைத்துள்ள உளவுத்துறை செய்திகள் மிகவும் திடுக்கிட வைக்கின்றன. காஷ்மீரைச் சேர்ந்த இரு பயங்கரவாதிகள் அயோத்தியில் ராம் சேவக்குகளின் கூட்டத்தோடு கலந்து, அங்கே ஊடுருவியிருப்பதாகக் கிடைத்த தகவல்தான் அது.

"உச்ச நீதி மன்றத்தின் தீர்ப்பு எதுவாக இருந்தாலும் அயோத்தியில் கலவரங்களை உண்டு பண்ண பெரிய அளவில் சதித்திட்டங்கள் தீட்டி பல கரசேவகர்கள் அயோத்தியில் அங்கங்கு பத்திரமாக முன் கூட்டியே பதுங்கிவிட்டனர். அவர்களைப் போலவே பயங்கரவாத கும்பலைச் சேர்ந்த சுமார் பத்து பேரும் எங்கோ கரசேவகர்களின் போர்வையில் பதுங்கியிருப்பதாகவும் தகவல் கிடைத்துள்ளதாம்.

தீர்ப்பு வெளியான அன்று மாலையே தேசிய ஜனநாயக முன்னணியின் ஆதரவுக் கட்சிகள் கூட்டத்தைப் பிரதமர் கூட்டினார். எல்லாக் கட்சிகளும் இவ்விஷயத்தில் தங்கள் அதிருப்தியைக் காட்டிக் கொண்டன. எனினும் ஆதரவை விலக்கிக் கொள்வது பற்றி யாரும் பேசவில்லை! அவரவருக்கு அவரவர் பயம் என்கிறார்கள் இங்குள்ள பத்திரிகையாளர்கள். இப்போதைக்குத் தேர்தலைச் சந்திக்க யாருக்கும் தைரியமில்லை. மத்திய அரசில் தங்கள் கட்சியைச் சார்ந்தவர்கள் வகித்து வரும் அமைச்சர் பதவியை இழக்க யாரும் தயாராக இல்லை. முக்கியமாக சந்திரபாபு நாயுடு. அமைச்சரவையில் தெலுங்கு தேச உறுப்பினர்கள் யாரும் இல்லாவிட்டாலும் இந்த நேரத்தில் தேர்தலை வரவழைப்பது ஆந்திராவில் காங்கிரஸைப் பலப்படுத்திவிடும் என்று அவர் பயப்படுவதும் ஒரு காரணம். எனவே அவர்கள் ஒரு சிறிய கண்டனத்தோடு நிறுத்திக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம்.

தீர்ப்பு வெளியான அன்று மாலை விஸ்வஹிந்து பரிஷத்தும் வழக்கப்படி பத்திரிகையாளர் கூட்டத்தை ஏற்பாடு செய்தது. அதன் தலைவர்கள் பிரவீண் தோகாடியா, விஷ்ணு ஹரி டால்மியா, ஆச்சார்ய கிரிராஜ் கிஷோர் போன்றவர்களின் விமர்சனங்கள் மிகவும் கடுமையாக இருந்தன. இந்தியாவில் முதன் முறையாக ஹிந்துக்களின் பூஜை செய்யும் அடிப்படை உரிமை பறிக்கப்பட்டிருக்கிறது. இஸ்லாமியர்கள் தெருமுனைகளிலோ அல்லது தாங்கள் நினைத்த இடங்களிலோ தொழுகை நடத்த அனுமதிக்கப்படும்போது 14 இந்து கோயில்கள் அமைந்துள்ள ஓரிடத்தில் இந்துக்களை வழிபாடு நடத்த அனுமதிக்கவில்லை என்றார்கள்.

'இந்த நீதிமன்றம் எங்களுக்கு எதிராக இருந்தால் என்ன, நாங்கள் மக்கள் நீதி மன்றங்களை நாடிப் போவோம்!' என்றார்கள். ஒரு கோடி மக்கள் எங்களுடன் இருக்கிறார்கள் என்று தோகாடியா சொல்ல, பத்திரிகையாளர்கள் இந்த நாட்டில் மொத்தம் நூறு கோடி பேர் இருக்கிறார்கள் என்று இடைமறித்தார்கள். ஆனால் எந்தத் தலைவரும் அப்படிச் சொன்னவர்கள் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை!

- ராகவன் தம்பி

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



கோவை சரளாவுக்குக் கவர்ச்சியான குரல் என்று சொன்னால் குஸ்திக்கு வருவார்கள் பலர். ஆனால், Better get a stiff neck by aiming too high than a hunch back by aiming too low என்ற அறிஞர் வாக்கின்படி தன் சொந்தக் கீச் கீச் குரலிலேயே நின்று முன்னேறினால் போதும் என்பது அவர் கொள்கை. நடிப்புத் திறமையும் கை கொடுக்கிறது.

'கனவே கலையாதே'யில் அந்தப் பஞ்சாபி குடும்பத்துடன் அவர் போடுகிற கூச்சல்! அவர்கள் ஏதோ திட்டுகிறார்கள் என்று தப்பர்த்தம் செய்து கொண்டு, காச் மூச்சென்று மைல் நீளத்துக்குப் பதிலளிக்கிறார். முடிவுரையாக, 'இனிமேல் திட்டினால் என் பாஷையில் திட்டுங்க!' என்று சொல்ல, 'உன் சமையலைத்தான் நாங்கள் பாராட்டினோம்!' என்று அவர்கள் விளக்கியவுடன் 'அப்படிங்களா?' என்று குழைவது வெகு அழகு.

கோத்ரா கொடூரத்தைத் தொடர்ந்து அகமதாபாத் நகரில் நடந்த வன்முறைக் கலவரங்களை ஸ்டார் நியூஸில் பார்த்தபோது நெஞ்சம் பதறியது. கண்மண் தெரியாமல் கோரக் கொடுமைகள் நிகழ்த்தி, காட்டுமிராண்டித்தனமாக அப்பாவிகளின் கடைகளைச் சூறையாடியிருக்கிறார்கள். Hate is a prolonged suicide என்ற ஞானம் யாருக்குமே உறைக்கவில்லை. ஆதிவாசிகள் நடத்திய அட்டூழியத்திலும் அப்படித்தான். கடைகளை உடைத்துப் புகுந்து, அகப்பட்டதையெல்லாம் அள்ளி எடுத்துக் கொண்டு அவர்கள் பாட்டுக்கு ஜாலியாகப் போகிறார்கள். அநியாயம்!

அகமதாபாத்தில் ஒரு முடி திருத்தும் தொழிலாளி, 'என் கடையில் மிஞ்சியதெல்லாம் இதுதான்' என்று காட்டினார் ஒரு சவரக் கத்தியை. உள்ளே நாற்காலிகளும் அலமாரிகளும் படங்களும் சின்னாபின்னமாகச் சிதறிக் கிடந்தன. அறுந்து தொங்கிக் கொண்டிருந்த ஒரு படம்- ஆஞ்சனேயர்!

"என்னை முஸ்லிம் என்று ஒரு சாக்குச் சொல்லி, கொள்ளையடித்திருக்கிறார்கள்! இவர்களுக்கு மதப்பற்று எதுவும் கிடையாது. வெறும் திருடர்கள்!" என்றார் கன்னத்தில் கண்ணீர் வழிந்தோட.

குஜராத் கலவரங்களைப் பற்றிச் சொல்லும்போது, பர்க்கா தத் நடத்தும் 'ரியாலிடி பைட்ஸ்' பற்றியும் சொல்ல வேண்டும். பல தரப்பட்ட கருத்துள்ளவர்களையும் சம்பந்தப்பட்ட முக்கியஸ்தர்களையும் திரட்டி வைத்துக்கொண்டு குடை குடையென்று குடைகிறார்.

"கலவரப் பகுதிக்கு ராணுவம் ஏன் உடனே வரவில்லை? பதினைந்தாயிரம் ரௌடிகள் போலீஸ் உடந்தை இல்லாமலா சுதந்திரமாய் நடமாட முடிந்தது?" என்பது போன்ற அவரது கேள்விகளுக்குச் சரியான பதில் தர முடியாமல் ஏதேதோ மழுப்பினார் உள்துறை துணை அமைச்சர் எஸ்.டி. சுவாமி. Double standards are the hall marks of Indian politics என்றாகிவிட்டது.

பார்வையாளர்களில் ஒருவர், "நான் ஹிந்துதான். ஆனால் ஒரு ராமர் கோவில் கட்டுவதற்காக

# 'ஈத் ஈத்' ஏடலைதனம்

ரிமோட்

ஒரு முஸ்லிம் இறக்கக்கூடாது என்பது என் கருத்து," என்று கூற, "ஒரு ஹிந்து இப்படிப் பேசக் கூடாது" என்று இன்னொருவர் குரல் எழுப்ப, சில நிமிடங்களுக்கு லோக் சபா போல் ஆயிற்று அந்த இடம். பர்க்கா தத் ஏதோ வேடிக்கையாகச் சொல்லி அமைதி ஏற்படுத்தினார்.

அவையில் அளவுக்கு மீறி வெப்பம் எகிறும்போது ஜோக்காக ஏதேனும் சொல்லி எல்லாரையும் சிரிக்க வைக்கும் திறமை இந்தக் குட்டை முடிப் பெண்ணிடம் இருக்கிறது. When everybody is somebody, then nobody is anybody என்பதை உணர்ந்திருக்கிறார். (விளங்கிக் கொள்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் இனாம்.)

அந்தப் பூக்காரப் பெண்ணுடன் பொதிகையில் நடந்த பேட்டி மனசைத் தொடுவதாக இருந்தது. பூ வியாபாரத்தில் தினசரி முப்பது நாற்பது ரூபாய் கிடைக்கிறதாம். மூன்று குழந்தைகளைப் பெற்று ஒன்றை யாருக்கோ விற்று விட்டாளாம் - ஐயாயிரம் ரூபாய்க்கு. 'அந்தப் பிள்ளை இப்போது எங்கே இருக்கிறதோ தெரியாது' என்றாள்.

"பணக்காரியாக வாழ வேண்டும் என்ற ஆசை இல்லையா?" என்று கேட்டதற்கு, "வயிறு நிறையச் சாப்பாடு, குழந்தைகளுக்கு நல்ல படிப்பு, நாலு துணி மணி - இதுக்கு மேலே எதுக்குங்க?" என்றவள், கணவனிடம் அடி வாங்குவதுண்டு என்று தெரிவித்தாள்.

"நீ திருப்பி அடிக்கிறது உண்டா?"

"இல்லைங்க."

"ஏன்? தைரியம் இல்லையா?"

"தைரியம் இருக்குதுங்க. ஆனால் மனுசு வரலீங்க."

பேட்டி கண்ட வி.கே.பாலன், condescending தோரணை இல்லாமல், அன்பான சகோதரனைப் போலக் கனிவுடன் பேசினார். நிகழ்ச்சி முடிவில் அந்தப் பூக்காரப் பெண், படுகிற கஷ்டங்களையெல்லாம் மறந்து, தன் குழந்தைகளுடன் உட்கார்ந்து மலர மலர வாய்விட்டுச் சிரித்தாள். She has been through hell these past years என்பதே தெரியவில்லை.

**வினோத்**

அன்று குஜராத் கிழவர் கண்ட கதர் கனவு இன்று விஜய் - கீதாவின் படைப்பாற்றலால் தங்கம் கொழிக்கும் வண்ணச் சுரங்கமாக மாறியுள்ளது. கதராடை என்றாலே தொள தொள சட்டைகளும், வெளிறிய ஜிப்பாக்களும், தூசி படிந்த தள்ளுபடி விற்பனைகளும்தான் நினைவுக்கு வரும். ஆனால் இன்று... வெயிஸ்ட் கோர்ட், ராப் அரவுண்ட் ஸ்கர்ட், பாரலல்ஸ், குர்தா, சல்வார் கமீஸ், ஷர்ட், துப்பட்டா, டாப்ஸ் என இதோ இந்தப் பக்கத்தில்

# கலக்குது பாருங்க கதர்!



நீங்கள் காணும் அத்தனை நவநாகரிக ஆடைகளும் கதர் துணியால் தைக்கப்பட்டவைதான். டிஸைன் செய்தவர்கள் சென்னை, ப்ரேயனி டிஸைனர்ஸ் விஜய் மற்றும் கீதா.





சில மாதங்களுக்கு முன் கே.வி.ஐ.சி. சார்பில், ஜி.வி. வெங்கட்நாராயணா தலைமையில் கதர் மேம்பாட்டுக் கூட்டம் ஒன்று சென்னையில் நடைபெற்றது. காதிபவனின் முக்கியஸ்தர்கள், எழுபதுக்கும் மேற்பட்ட நெசவாளர் சங்கங்கள் என்.ஐ.எஃப்.டி. போன்ற டிஸைனர்கள் கலந்து கொண்ட இந்தக் கருத்தரங்கில், முக்கியமாகப் பேசப்பட்ட விஷயம், கோடிக் கணக்கில் தேங்கிக் கிடக்கும் கதர் ரகங்களை எப்படி விற்பது, என்பதுதான்.

நிறைய விஷயங்கள் அலசப்பட்டு, பிரச்னைகள் விவாதிக்கப்பட்டன. நெசவாளிகளின் பேச்சு கல்லையும் கரைய வைப்பதாக இருந்தது.

"கிடங்குகளில் கதர் துணிகள் தேங்கிக் கிடக்கின்றன. நெசவுத் தொழிலாளிகள் வறுமையில் வாடுகிறார்கள். சாயப்பட்டறைகள் மூடப்பட்டுவிட்டன.



கடன் சுமை தாளாமல் பலர் குடும்பத்தோடு தற்கொலை செய்து கொள்ள, இன்னும் சில வீடுகளில் பெண்கள் விலை மாதர்களாகி விட்டனர். இளைஞர்கள் நிலை இன்னும் மோசம். இது இப்படியே தொடர்ந்தால்.." கண்ணீர்க் கதைகளைக் கேட்க கேட்க, கதராடைக்குப் புத்துயிர் கொடுக்க தங்களால் முடியும் என்று ஓர் உத்வேகம் கிளம்பவே, அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர் விஜய் - கிதா!

இருபத்து இரண்டு விதமான கதர் சாம்பிள் துணிகளை வாங்கி, 287 விதமான நவீன டிஸைன்களைத் தைத்தனர். அடுத்ததாக பெங்களூரில் நடந்த கதர் மாநாட்டில் தமிழ்நாட்டின் சார்பில் கலந்து கொண்டு தங்களின் புதிய டிஸைன்களை அறிமுகப் படுத்தியபோது, யாரும் நம்புவதாகவேயில்லை.

''என்ன? நாங்கள் கொடுத்த கதர் துணியா இது? நம்பவே முடியவில்லையே." என்று சங்கங்களே வியக்க, இந்தியா முழுவதிலுமிருந்து வந்திருந்த டிஸைன்களில் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, கதர் உடைகளை டிஸைன் செய்யும் பெருமை மிக்க வாய்ப்பு ப்ரேயஸிக்கே கிடைத்தது.

"அதே கதர் துணிதான். ஆனால் புதிய நிறங்களில், விதவிதமான டிஸைன் அமைத்தோம். நவீன பாணியில் தைத்தோம். கிளிக் ஆகிவிட்டது. 'வீ வாண்ட் ஃப்ரெஷ், கூல் காட்டன்' என்று வெளிநாட்டவர்கள் கேட்டு வாங்கி அணிகிறார்கள். ஆனால் நாம்தான் நம்முடைய பழம் பெருமையைப் புறக்கணித்து விட்டோம்" என்று வருத்தப்பட்டார் கிதா.

"காந்தி பெரிதும் விரும்பிய எளிய ஆடை கதர். இந்தியாவின் பாரம்பரியம். இந்தியர்களாகிய நாம் அனைவரும் ஆண்டுக்கு ஒரு கதராடை வாங்கினாலே கதர் வாரியம் புத்துயிர் பெறும். நெசவாளர்கள், சாயத் தொழிலாளிகள், தையல்காரர்கள், டிஸைனர்கள் என இலட்சக் கணக்கானவர்கள் மறு வாழ்வு பெறுவர். இளைய சமுதாயத்தைக் கதராடை பக்கமாகத் திருப்ப வேண்டுமென்றால் புதிய கண்ணோட்டம் தேவைதானே!" என்கிறார் விஜய்.

தமிழ்நாட்டில் காதி அலை புத்துணர்வோடு தவழவிருப்பதையறிந்து ஆந்திர மாநிலத்திலிருந்தும் ப்ரேயஸிக்கு அழைப்பு வந்துள்ளதாம்.

ஆர். லலிதா



ஓம் சரவணபவ

# "ஒரு தேவனும் ஒரு தேவாலயமும்"

*- இரத்தினகிரி வரலாறு*

## நூல் வெளியீட்டு விற்பனை முன்பதிவு

## இரத்தினகிரி பாலமுருகனின் மகா அபிஷேகத்தோடு 19.02.2002 செவ்வாய்க்கிழமை கிருத்திகை நாளன்று துவங்கியது

நான்கு கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டு நிறைவடைந்து, இன்னும் சின்னஞ்சிறு வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும், கோயிலின் விரைவில் நடக்க இருக்கும் கும்பாபிஷேக விழா நான்கு நாட்களுக்கு முன்பு முன்விற்பனை நிறைவடைகிறது.

அன்று 20.03.1968 சச்சிதானந்தம் அடிமையானது; மெய்ஞ்ஞானம் பெற்றது. ஆட் கொண்டவன் - கட்டத் துணிக்கும், கற்பூரத்துக்கும் வழியில்லாத பாலமுருகன், பாலமுருகனடிமை - அனைத்தையும் துறந்து, முருகனுக்கு அணிவித்திருந்த துண்டைக் கோவனமாக்கிக் கொண்டு குன்றிலேயே அமர்ந்த - மோனத்தவம் இன்று குன்றே பெருங்கோயிலாக உருவெடுத்துள்ளது.

கற்பனைக்கலப்பே இல்லாத, கற்பனைகள் அத்தனையையும் மிஞ்சும் - விஞ்சும் அதிசயமான இரத்தினகிரி பாலமுருகனின் ஆன்மீக அன்றாட ஞான வரலாறு.

தெய்வ அருள் மனித மனத்தில் செயல்படும் மகா ஆச்சரியமான, செயல்பாட்டு விந்தையை, உண்மைக்கு உண்மையாய், உண்மையான நிகழ்ச்சிகளோடு உரைக்கும் உத்தமான வேதம்.

இருபது ஆண்டுகள் பார்த்துப் பார்த்துச் சிந்தித்துச் சிந்தித்து, இழைத்து இழைத்து, கட்டிய ஒரு மாபெரும் கோயிலின் மகத்தான வரலாறு. இதை எழுதி எழுதி, சிந்தித்துச் சிந்தித்து, அனுபவம் அனுபவமாக்கி, அழகு அள்ளிவர எழுதப்பட்ட நூல்.

**பக்தப் பெருமக்களுக்கு!**

வாழ்வில் நல்லவைகளையே, மகிழ்ச்சிகளையே நாடும் தெய்வ மனம் கொண்ட மாபெரும் பக்தப் பெருமக்களே! வணக்கங்கள்! உலகிலேயே சான்றோர்கள் மலிந்துள்ள நாடு தமிழ்நாட்டின் தொண்டைநாடு, உலகிலேயே ஆறுகளில் மகத்தான தாய்மை தர்மம் தழைத்தோடும் ஆறு அன்னை பாலாறு, மழை பொய்த்தது என்றாலும், மலையில் உள்ள பனி உருகவில்லை என்றாலும் மகத்தான கங்கை நதியும், காட்டுக்கரம்பாய் உலர்ந்துவிடும்.

மழை வறண்டு, மலை வறண்ட போதும் மணலைத் தன்மீது மலராகப் போர்த்திக் கொண்டு சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தில் பாடுவதுபோல், உறங்கி விழித்த குழந்தை உறுத்தும் பசியோடு விரலால் தடவியதும் தாய் மார்பில் பால் ஊறுவது போல், தன் கரையில் - தன் பரந்த சமவெளி மடியில் மக்கள் தாகத்தால் - பசியால் குடிநீருக்கும், பயிர் நீருக்கும் கைவைத்துத் தோண்டியதும், ஊறி ஊறித் தண்ணீர் கொடுத்து, உவப்போடு நடந்தபடி, உயிர் கொடுத்து வாழவைக்கும் பாலாற்றுத் தாயின் கரையில்.

**இரத்தினகிரியில்**

உலகம் முழுவும், பக்தி உள்ளவர்களுக்கு உவந்து அருள் செய்தபடி அமர்ந்திருக்கிறான்.

- பால முருகன் -

அவனுடைய அற்புத வரலாறு; அவனுடைய அடிமையின் அழகான வரலாறு; இவர்கள்

# பொன்னியின் செல்வன்'கள்'

கோலிவுட் வட்டாரத்தில் கடந்த பதினைந்து நாட்களாக ஒரே பரபரப்பு; பதற்றம். விஷயம் இதுதான். அமரர் கல்கியின் வரலாற்றுக் காவியமான 'பொன்னியின் செல்வனை ஒரே சமயத்தில் சின்னத்திரைக்காக இரு நிறுவனங்கள் தயாரிக்கின்றன. அந்த பிரம்மாண்டத்தை சின்னத்திரையில் கொண்டு வர கோடிக்கணக்கில் செலவாகும் என்றாலும் துணிந்து இறங்கியுள்ளன. கோல்ட் டெலிவிஷன் நெட்வார்க்; இன்ஹவுஸ் புரொடக்ஷன் மற்றும் நியூ ஏஜ் எண்டெர்டைன்மெண்டுடன் இணைந்து தயாரிக்கும் பொன்னியின் செல்வனை இயக்குபவர் கே.எஸ். கோபால கிருஷ்ணன்.

சிங்கப்பூரைச் சேர்ந்த ஹெப்ரான் இமேஜ் மேக்கர்ஸ், சென்னையைச் சேர்ந்த பாக்ஸ் ஆபீஸ் டீ.வி. நெட் ஓர்க்குடன் இணைந்து தயாரிக்கும் பொ.செ.வுக்கு அரவிந்தராஜ் இயக்குனர். இரு நிறுவனங்களின் படத் துவக்க விழாவுக்கும் கமல்ஹாசன் வந்து வாழ்த்திவிட்டுச் சென்றார். கே.எஸ்.ஜி டைரக்ட் செய்யும் பொ.செ. ஏப்ரல் பதினான்காம் தேதியிலிருந்து வாரம் ஒருமுறை சன் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாக இருக்கிறது.

"நாங்கள் இயக்கும் பொன்னியின் செல்வன் இந்தியாவின் நம்பர் ஒன் சேனலில் சாதனை படைக்கும், அதே ஏப்ரல் பதினான்காம் தேதியிலிருந்து என்று நம்பிக்கையுடன் சொல்கிறது அரவிந்தராஜ் தரப்பு. இரு பொ.செ.விலும், யார் யார் நடிக்கிறார்கள்? குறிப்பாக வந்தியத்தேவன் யார்? ஆழ்வார்க்கடியான் யார்? இரண்டு தரப்பிலும் வாய் திறக்க மிகவும் யோசிக்கிறார்கள். காரணம் ஒருவர் சாய்ஸை ஒருவர் தட்டிக் கொண்டு போய் விட்டால் என்ன செய்வது? இரு தரப்புக்கும் கமல் சொன்ன பொதுவான அட்வைஸ்: "பொறாமை வேண்டாம்; போட்டியிருக்கட்டும்; இதன் காரணமாக தமிழர்களின் ரசனை வளரட்டும்"

ஆக பொன்னியின் செல்வன் வளர்கிறார்கள்!

திருநெல்வேலியைச் சேர்ந்த தாசன் சுந்தர்ராஜ் சிங்கப்பூரில் தொழிலதிபர். அங்கே சோழா ரெஸ்டாரெண்ட் என்ற உணவகத்தையும் நடத்தி வருகிறார். அந்த உணவகத்தின் ஒவ்வொரு தூணிலும் பொன்னியின் செல்வன் பாத்திரங்கள்தாம் ஓவியங்களாக உயிர் பெற்றிருக்கின்றன. சென்னையில் பாக்ஸ் ஆபீஸ் டீ.வி. நெட்ஓர்க் நடத்தும் பிரதீப், தாசனின் நண்பர். இருவரின் நீண்டநாள்

• அரவிந்தராஜ்

• மா. லக்ஷ்மணன்

• கே.எஸ்.ஜி



கனவு 'பொன்னியின் செல்வனை' சின்னத்திரைக்குத் தொடராக எடுக்க வேண்டும் என்பது. 'யாரை இயக்குனராகப் போடலாம்' என்று நீண்ட நாள் யோசித்து ஃபிலிம் இன்ஸ்டிடியூட் தயாரிப்பான அரவிந்தராஜை ஒப்பந்தம் செய்தார்கள். 'ஊமை விழிகள்', 'உழவர்மகன்' போன்ற திரைப்படங்களில் பல அசத்தல் காட்சிகளைச் சித்திரித்துக் காட்டியது மட்டுமல்லாமல், திருவள்ளுவர், திருவிளையாடல் புராணம் போன்ற வரலாற்றுக் காவியங்களையும் தத்ரூபமாக சின்னத்திரையில் காட்டிய அனுபவம் அரவிந்தராஜுக்கு உண்டு என்பதும் செலக்ஷனுக்கு ஒரு காரணம்.

''எவரெஸ்ட் சிகரத்தைத் தொட வேண்டும். நான் கீழே நின்றுகொண்டிருக்கிறேன். மேலே செல்லச் செல்ல, பல சோதனைகளைச் சந்திக்க நேரிடும் என்பது எனக்குத்



"தலைவரோட பையன் ப்ளஸ் டூ பரீட்சை எப்படி எழுதியிருக்கானாம்?"

"எல்லாக் கேள்விகளுக்கும் 'காலம் பதில் சொல்லும்'னு எழுதிட்டானாம்.

- தஞ்சை தாமு

தெரியும். துணிந்து நான் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டதற்கு ஒரு முக்கியக் காரணம், படிக்கும்போது ஒரு வாசகனுக்கு ஏற்பட்ட எண்ண ஓட்டத்தை அப்படியே திரையில் கொண்டு வர முடியும் என்ற நம்பிக்கைதான். அதற்கு தற்போது விஷுவல் மீடியாக்களில் ஏற்பட்டுள்ள தொழில்நுட்ப முன்னேற்றம் மிகவும் உதவும். அமரர் கல்கி எங்கள் வேலையை மிகவும் சுலபமாக்கி விட்டார். எதையும் சுருக்கத் தேவையில்லை. திரைக்கதை போன்றே எழுதி விட்டார் கல்கி. ஆரோக்கியமான ஒரு போட்டிக்குத் தயாராகிவிட்டேன்'' என்கிறார் அரவிந்தராஜ்.

ஏவி.எம். ஸ்டுடியோவில் நடந்த இவர்களது துவக்க விழாவே எல்லோரையும் பிரமிக்க வைத்தது.

''சின்ன பழுவேட்டரையரின் சித்திரக்கூடத்தில் வந்தியத்தேவன் நுழைந்து, சோழ மன்னர்களின் சித்திரங்களைப் பார்ப்பது போன்ற காட்சி ஒன்று நாவலில் இடம் பெறும். அதுபோன்ற உணர்வுதான் ஏற்படுகிறது'' என்றார் விழாவில் கலந்து கொண்ட கல்கி ராஜேந்திரன்.

அரவிந்தராஜ் யூனிட்டின் பெரிய பலம் ஆர்ட் டைரக்டர் கிருஷ்ணமூர்த்தி. கடந்த பதினைந்து ஆண்டுகளாக தாம் படப்பிடிப்புக்குச் சென்ற பல இடங்களில் பொன்னியின் செல்வனுக்கு ஏற்ற இடங்களைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறார். பெரிய பழுவேட்டரையரின் வேடத்தில் நடிகர் விஜயகுமார் நடிக்கிறார் என்ற விவரம் மட்டுமே தெரிகிறது. ஹாலிவுட்டில் பயிற்சி பெற்ற இளைஞர் ஒருவர் வந்தியத்தேவன் ரோல் ஏற்றுக் கொண்டிருக்கிறாராம்.

''இதை ஒரு சரித்திரக் கதையாக மட்டும் பார்க்கக்கூடாது. தற்காலத்துக்கும் நிறைய செய்திகள் உண்டு. குறிப்பாக மத நல்லிணக்கத்தை வலியுறுத்தும் பல காட்சிகள் உண்டு'' என்கிறார் அரவிந்தராஜ்.

பழம் பெரும் இயக்குனர் கே.எஸ்.ஜி.யின் யூனிட் ஓசையில்லாமல் பல காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறது.

''நான் பாய்ஸ் கம்பெனியில் நடிக்கும் காலத்திலிருந்தே பொன்னியின் செல்வன் மீது ஒரு காதல். தயாரிப்பாளர்கள் என்னிடம் வந்து "நீங்கள்தான் இயக்க வேண்டும்'' என்றபோது ''ஒரு வருடம் கொடுங்கள்; திரைக்கதை அமைத்து என்னைத் தயார்ப் படுத்திக்கொள்கிறேன்'' என்றேன். "எல்லாம் தயாராக இருக்கிறது. திரைப்படத் துறையில் நீண்டகால அனுபவம் கொண்ட மா.லட்சுமணன் திரைக்கதை வசனத்தை ஓராண்டு காலம் உட்கார்ந்து உருவாக்கி விட்டார்'' என்று சொன்னார்கள். வாங்கிப் பார்த்தேன். பிரமாதமாகச் செய்திருந்தார் அவர். உடனே ஓ.கே சொல்லிவிட்டேன். மற்றொரு யூனிட் எடுப்பது பற்றி நான் கவலைப்படவில்லை. இப்படி ஒரு



"எனக்கு 20... உனக்கு 18'ன்னு சொல்றாளே உன் காதலி... அப்ப அவளுக்கு உன்னைவிட ரெண்டு வ்யசு அதிகமா!"

"அட நீ ஒன்னு...! வாங்கிப் போட்டுக்கிட்ட சுண்டல்லே என்னைவிட அவளுக்கு ரெண்டு கடலை அதிகம் வேணும்னு சொல்றா!"

- கிருஷ்ணபுரம் கே.ஜி.எஸ்

போட்டி இருந்தால்தான் என் தயாரிப்பில் ஆழமும், அழகும் இருக்கும். நான் இந்தத் துறைக்கு வந்தபோது பல ஜாம்பவான்கள் இருந்தார்கள். அவர்களை ஆரோக்கியமான போட்டியில் சந்தித்துத்தான் கால் ஊன்ற முடிந்தது'' என்றார் கே.எஸ்.ஜி.

திரைக்கதை வசனம் எழுதும் மா. லட்சுமணன், கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளாகத் திரைப்படத் துறையோடு தொடர்பு கொண்டவர். எம்.ஜி.ஆர் படங்கள் பலவற்றை உருவாக்குவதில் துணை நின்றவர்.

''எனக்குக் கிடைத்த பெரிய வாய்ப்பாக இதை நான் கருதுகிறேன். இந்த வரலாற்றுப் புதினத்தில் முக்கியமாக 34 கதாபாத்திரங்கள் இருக்கின்றன. பல ஃபிளாஷ்பேக் காட்சிகள் உண்டு. கூடிய மட்டும் கதை சொல்லும் பாணியை நேரடியாகக் கொண்டு செல்ல வேண்டும் என்று நினைக்கிறோம்'' என்கிறார் லட்சுமணன். கே.எஸ்.ஜி யூனிட்டின் ஆர்ட் டைரக்டர் கலை வித்தகர் தோட்டாதரணி. இது தவிர கூடுதல் பலம் காஸ்டியூம் இயக்குனராக பிரபல ஓவியர் மணியம்செல்வன் பணியாற்றவிருக்கிறார்.

எல்லாம் சுமுகமாக நடக்கும் பட்சத்தில் ஏப்ரல் பதினான்காம் தேதிக்குப் பிறகு இரு தமிழ் கூறும் தொலைக்காட்சிகளில் இந்தக் காவியம் அரங்கேறும்போது தமிழகம் முழுவதும் மக்கள் பொது இடங்களிலும், வீடுகளிலும் இரு தயாரிப்புகளையும் ஒப்பிட்டுப் பேசும் காட்சி இப்போதே நம் கற்பனையில் எட்டிப் பார்க்கிறது. இப்படிப்பட்ட ரசனைப் பரிமாற்றங்கள் தமிழனுக்கு அவனது வீர வரலாற்றையும், பாரம்பாரியத்தையும் உணர்த்தி பெருமைப்பட வைக்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அந்த ஒரு சூழலை உருவாக்குவதற்காக முனையும் இந்த படைப்புகளை அமரர் கல்கியின் பாணியிலேயே 'பேஷ்... பேஷ்!' என்று வரவேற்கிறோம்.

- ப்ரியன்

படங்கள்: ராஜன்

## கல்கி - VBC Jewellery

இணைந்து வழங்கும்

### புன்னகைப் போட்டி - 3 முடிவு

நம்ம ஊருக்கு வந்திருக்கும் ஜிம்பாப்வே கிரிக்கெட் அணியை வாழ்த்தி வர வேற்கச் சொல்லியிருந் தோம். தமாஷாக வாழ்த்தியவர்களில் இருவர் தலா நான்கு கிராம் தங்கம் பெறுகிறார்கள். வாழ்த்துக்கள்!

### கவலை உனக்கு ஏனய்யா?



தேர்ந்தெடுக்கப்பட்டவை:

தொடரை எண்ணித் துவளாதே!
ஒருநாள் இருக்கு, கலங்காதே!
உனக்கும் கீழே கென்யா!
கவலை உனக்கு ஏனய்யா?

**பி. சரவணன்,**
**34, மேற்கு ஜோன்ஸ் ரோடு,**
**மேற்கு சைதை.**
**சென்னை - 15**

லக்ஷ்மண் சதமடித்தால் கங்குலி
இருபது!
கங்குலி சதமடித்தால் லக்ஷ்மண்
முப்பது!
துணை புரிய நாங்கள்
காத்திருக்கிறோம்!
நீங்கள் ஜெயிக்கிற வழியைப்
பார்த்திருக்கிறோம்!

**க. இராமலிங்கம்,**
**47/24 பேட்டை வீதி,**
**புதுப்பேட்டை,**
**கடலூர் மாவட்டம் - 607 108**

• படம்: சௌரா

தமிழக அரசு தண்ணீர்ப் பந்தல்

பாரு!
உனக்காக
எவ்ளோ பெரிய
குவளை ரெடி பண்ணிருக்கேன்.
பானையிலேருந்து
மொண்டு மொண்டு
குடிக்கலாம்....

கஜானா

15 அம்சத் திட்டம்




2002 மார்ச் 24
விஷு பங்குனி 10
மலர் : 60
இதழ் : 34

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# புதிய முதல்வர்; பழைய போக்கு!

ஆட்சி அமைத்து நூறு நாட்கள் ஆன பிறகே ஓர் அரசை விமர்சிப்பது மரபு. ஆனால் ஜெயலலிதா முதல்வரானதுமே அறிவித்திருக்கும் திட்டங்களை உடனடியாக ஆராய்ந்து விமர்சிக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். முதல்வர் புதியவர் என்றாலும் அரசு அமைக்கப்பட்டு நூறு நாட்களுக்கும் மேல் ஆகிவிட்டது என்கிற வினோதமான நிலையைத் தமிழகம் சந்திக்கிறது. இந்த காலகட்டத்தில் மாநிலத்தை முன்னேற்றவோ வளப்படுத்தவோ எதுவும் செய்யப்படவில்லை. மாறாக, விலைவாசி உயர்வு தமிழ்நாட்டு மத்தியதர மக்களை வெகுவாக பாதித்திருக்கிறது.

புதிய முதல்வர் வருகையால் நிலைமை மந்திரக்கோல் வீசியதுபோல் சரியாகிவிடும் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. காலி கஜானாவை வைத்துக் கொண்டு கனவுக் கோட்டைகள் கட்ட முடியாது என்பதையும் அறிவோம்.

ஆனால், ஜெயலலிதா முதல்வரான பிறகு முக்கியமான முடிவுகள் சரியான முறையில் எடுக்கப்பட்டு, வருவாய்க்கு முதலில் வழி பிறக்கும் என்று எதிர்பார்த்தால், ஏமாற்றமே ஏற்பட்டிருக்கிறது.

ஆளுனர் உரையில் அறிவிக்கப்பட்ட பதினைந்து அம்ச திட்டமானது செலவுகளைக் குறைக்கவோ வருவாயை விரைவாகப் பெருக்கவோ வழி வகுக்காமல், அரசு




செலவினங்களை அதிகரிப்பதற்கான திட்டமாகவே இருக்கிறது. பதினைந்து அம்சங்களுள் பெரும்பாலானவை சமுதாய நல மேம்பாட்டுத் திட்டங்கள். இவற்றால் வரவு கிடையாது; செலவுதான்! மற்றவை அபிவிருத்தித் திட்டங்கள் என்பதால் அவற்றின்மூலம் பெறக்கூடிய வருமானமும் காலப்போக்கில்தான் கஜானாவை அடையும் - அதுவும் திட்டம் சரியாக நிறைவேற்றப்பட்டால் மட்டுமே!

அரசுக்கு வந்து சேர வேண்டிய வரி பாக்கி ஏராளமாக இருக்கிறது. இதை ஆளுனர் உரையே ஒப்புக் கொள்கிறது.

கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலையும் கதையாக, வரி வசூலை மறந்துவிட்டு மத்திய அரசின் நிதி ஒதுக்கீடு கொள்கையைக் குறைகூறிக் கொண்டிருக்கிறது தமிழக அரசு.

'பொருளாதாரம் மேம்பட கடினமான முடிவுகள் எடுக்கப்பட்டாக வேண்டும்' என்ற அறிவிப்பு ஒரு பக்கம்; இன்னொரு பக்கம் 15 அம்ச திட்டத்தில் ஏராளமான சமூக நலத் திட்டங்கள். இந்த முரண்பாடு, பொருளாதார முன்னேற்றத்துக்கு உகந்தது அல்ல.

போதா குறைக்கு, அரசுப் போக்குவரத்து முற்றிலுமாகத் தனியார் மயமாக்கப்பட்டுவிடும் என்ற அறிவிப்பு வேறு வெளியாகியுள்ளது. இதுவும் குறுகிய நோக்குடைய தவறான முடிவே ஆகும். கட்டண உயர்வுக்குப் பின்னரும் அரசு போக்குவரத்து தான் இன்று தமிழகத்துள் பயணம் செய்ய ஏழை எளியவர்களுக்கு ஓரளவு கட்டுப்படியாகிற போக்குவரத்தாக அமைந்துள்ளது. தொழில் நடப்பதற்கு மட்டுமின்றி கல்வி கற்பதற்கும் இந்தப் போக்குவரத்து அமைப்பைப் பொதுமக்கள் மிகப் பெரிய அளவில் பயன்படுத்துகிறார்கள்.

இந்த அடிப்படை வசதியை, லாப நோக்கை மட்டுமே பிரதானமாகக் கருதக் கூடிய தனியாரிடம் விட்டுவிடுவது ஏழை எளிய மக்களுக்கு மட்டுமின்றி நடுத்தர வர்க்கத்தினருக்கும் செய்கிற அநீதியாவே அமையும்.




அரியலூர் மாவட்டம் மீண்டும் பெரம்பலூருடன் இணைக்கப்படுவது சிக்கன நடவடிக்கை எனினும், தரப்பட்ட சலுகையை இவ்வளவு சீக்கிரம் திரும்பப் பிடுங்கினால் மக்கள் கொதிப்படையவே செய்வார்கள்.

அனைத்துத் துறைகளிலும் வீண் செலவுகளைக் கட்டுப்படுத்தவும் எரி பொருள் சிக்கனம், மின் வினியோகத்தில் விரயம் தவிர்த்தல் போன்றவற்றில் கவனம் செலுத்தவும் அரசு இயந்திரம் முடுக்கிவிடப்பட வேண்டும்.

தொழில் துறையில் தனியார் நிறுவனங்கள் பெருகித் தழைக்க உகந்த சூழல் உருவாக்கித் தரப்பட வேண்டும்.

இவை நடைபெற வேண்டுமானால் ஜெயலலிதா இப்போது சிந்தித்துச் செயல்பட்டிருக்கும் கோணத்துக்கு நேர் எதிர்க் கோணத்தில் சிந்தித்து இயங்க வேண்டும்.

அதற்கு மிகுந்த நெஞ்சுரமும் சரியான நிபுணர்களின் அறிவுரையைத் துணை கொள்ளும் பணிவும் அவசியம். எதிர்க்கட்சிகளின் ஆமோதிப்பும் பங்கேற்பும் பெறமுடியுமானால் மேலும் நல்லது.

சட்டசபையைக் கட்சி அரசியலுக்கான களமாக மாற்றி, சேப்பாக்கத்தில் கருணாநிதியின் அலுவலகம் தாக்கப்பட்டதற்கும் சரி, பாலன் காணாமல் போனதற்கும் சரி, தி.மு.க.வே காரணம் என்று தீர்ப்பே அளித்திருக்கிறார் ஜெயலலிதா. இந்த அணுகுமுறை ஆரோக்கியமானதல்ல.

விசாரணைக்கு அழைத்துச் செல்லப்பட்ட இஸ்லாமிய தீவிரவாதிகள் தப்பி ஓடியது காவல்துறை பேரில் விழுந்த கரும்புள்ளி.

தவறுகளுக்குப் பொறுப்பேற்று, அவை மீண்டும் நடைபெறாதிருக்க நடவடிக்கை எடுப்பதே அரசுக்கு அழகு.

இந்தப் பண்புடன் பொருளாதார தீர்க்கதரிசனத்தையும் முதல்வரிடம் எதிர்பார்க்கிறது தமிழகம். ○

## சத்திய ஜோதி டிரஸ்டின் உதவியுடன் பல தொழில்கள் தொடங்க இருக்கிறோம்.

முதலீடு செய்ய விரும்புவோர், பணி புரிய டிபாசிட் செலுத்த வசதி உள்ளவர்கள் மட்டும் பயோடேட்டாவுடன் **28.3.2002** காலையில் சென்னை ஹோட்டல் பிக்னிக் (ரிப்பன் பில்டிங் சமீபம்)ல் கவுன்சிலிங்கில் கலந்து கொள்ள அழைக்கிறோம்.

தொழில்கள், ரிசார்ட், மருத்துவமனை, மருந்து தயாரிப்பு, இணை கல்லூரி (கம்ப்யூட்டர் ஹைடெக்) திரைப்பட கல்வி – பட தயாரிப்பு – விநியோகம், ஊனமுற்றோர் நல மையங்கள்.

*விவரங்களுக்கு:* –

**A. நடராஜ்**

**போன் : 6447791**

---

## வாஸ்து, பெங்சுயி, இராசிக்கல், எண்கணிதம், கைரேகை மற்றும் ஜாதகம் கற்கவும் ஆலோசனைக்கும்

அணுகுவீர் : ✆ 2440236

ஜோதிடஞானி

**Dr. S. பாஸ்கரன் M.D.(ACU)**

No: 3, கருணீகர் தெரு
(V.S.V காம்ப்ளக்ஸ் முதல் மாடி),
(பரங்கிமலை இரயில் நிலைய Subway அருகில்) ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

**J.P.B. ஜெம்ஸ்**

குறைந்த விலையில் ராசிக்கல் மோதிரங்கள் கிடைக்கும்.

நேரம் : காலை 9 முதல் 12.30 வரை
மாலை 4 முதல் 9.00 வரை

---



ESTD : 1955 ஸ்ரீ நாமகிரி அம்மன் துணை ✆ 0431-704312, 706823

## 20 நாட்கள் கொண்ட இமாலய

### ஸ்ரீ பத்ரிநாத்-கேதார்நாத்-வாரணாசி (காசி) யாத்திரை

சென்னையில் இருந்து **12.5.2002**ம் தேதி தனி 3 டயர் கேரேஜ் மூலம் புறப்படுகிறது. கட்டணம் ரூ. **9,675/-** பத்ரி-கேதார்-மலைபிரதேச யாத்திரை கட்டணம் நபருக்கு ரூ. **2,750/-** தனி. இந்த யாத்திரையில், திரு/திருமதிகள். கீழ்பென்னாத்தூர் பாண்டுரங்கன், உமாராணி, மகேஸ்வரி, பாலசுப்ரமணியன், ராஜேஸ்வரி, கள்ளக்குறிச்சி முத்துகிருஷ்ணன், லக்ஷ்மிபாய், திருக்கோவிலூர் சுப்பிரமணியன், காந்திமதி, திருச்சி ராமசாமிபிள்ளை, மணிமேகலை, மீனாட்சி சுந்தரம், சாந்தாமணிதேவி, ராமச்சந்திரன், பானுமதி, கண்ணன், லட்சுமி, சுதர்சனன், ராஜேஸ்வரி, ரஞ்சித், சாலினி, பள்ளக்காடு அமராவதி, காவனூர் முருகேசம்பிள்ளை, கலாமதி, திருவண்ணாமலை தத்தாத்திரேயன், சரஸ்வதி, சேலம் துவாரகநாதன், ஜகதீஸ்வரி, சிவகாசி ராஜாமணி, அம்சகல்யாணி, சென்னை ராமச்சந்திரன் தமயந்தி, விருத்தாசலம் கதிர்வேல், வசந்தா, காந்திமதி, பழமலை, மீனாட்சி, சாமிநாதன், முத்துமணி, ஆண்டாள், திருச்சி வாணப்பட்டரை தெரு முத்துலக்ஷ்மி அம்மாள் பார்ட்டியார் முதலானோர் சேர்ந்துள்ளார்கள்.

## 16 நாட்கள் கொண்ட வைகாசி மாத காசி யாத்திரை ஸ்பெஷல்

**10.6.2002**ம் தேதி தனி 3 டயர் கேரேஜ்மூலம் புறப்பட்டு காசி அலகாபாத், திருவேணி, கயா, புத்தகயா, அரித்வார், ரிஷிகேஷ், டில்லி, ஆக்ரா, மதுரா, டில்லி வழியாக சென்னைக்கு அதே கேரேஜ் திரும்புகிறது. நபருக்கு ரூ.**8550/-** இந்த யாத்திரையில் திரு/திருமதிகள். கும்பகோணம் பாண்டியன், குஞ்சிதபாதம்; வள்ளி, வைரத்துஆச்சி, ராதா, சென்னை தவமணி, லீலா, ராஜாமணி, துறையூர் சுசீலா, திருச்சி ரங்கநாதம், லலிதா, பார்வதி, தாஸ், நாராயணன், கார்த்திகவள்ளி, சாந்தாபாய், சுந்தராம்பாள், மதுரை சீதாராமன், ஜெயங்கொண்டம் கந்தசாமி, சகுந்தலா முதலானோர் சேர்ந்துள்ளார்கள். இன்னும் சில இடங்களே உள்ளன. ரூ. **2,500/-** வீதம் அட்வான்ஸ் அனுப்பி முன்கூட்டியே பதிவு செய்து கொள்வது நலம்.

## ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ், (Regd.)



34, A/2, நடு அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.

ஆர்கனைசர்கள் : E.N. சேகர் - N. கங்காதரன் E-mail : namagiritravels@yahoo.com



ஜே.எஸ்.ராகவன்

# கேபிள் காந்தாரி

எப்போதும் சிவலிங்கத்தைத் தரிசனம் செய்து கொண்டிருக்கும் நந்தியைப் போல் டெலிவிஷன் முன்னால் கண் கொட்டாமல் தவமிருக்கும் சராசரி பெண்களிடமிருந்து மாறுபட்ட மாலதி, 'மருமகள்' நேரத்தில் ஜானகிராமனின் மரப் பசுவைப் படித்துக்கொண்டிருந்தது எனக்கு வினோதமாகத் தோன்றவில்லை.

''வீட்டு மருமகள், சானல் 'மருமகளை'ப் பார்க்கவில்லையா?''

கேலிக்குரல் கேட்டுத் திரும்பிய மாலதி, புன்னகையுடன் 'மரப்பசு' இடையில் புக்மார்க்கை வைத்து மூடினாள்.

"வாங்கோ, எப்போ டெல்லியிலிருந்து வந்தீங்க?''

"கார்த்தாலே. ரமேஷ் எங்கே? ஆபீஸ்லேருந்து இன்னும் வரலியா?''

"மதுரை போயிருக்கார். திரும்பி வர இரண்டு நாளாகும்."

"நிலா, நிலா ஒளியோடு..." நித்யஸ்ரீயின்



''பீரோ சாவியை வைச்சுக்கிற விவகாரத்தில் எப்படி சமரசமாப் போனாங்க?''

''மாமியார் பீரோ சாவியை மருமகளும், மருமகள் பீரோ சாவியை மாமியாரும் வைச்சுக்கிறதா முடிவுக்கு வந்துட்டாங்க.''

- பர்வதவர்த்தினி

கணீர்க் குரல் பக்கத்து ரூமிலிருந்து, கம்பீரத்துடன் - ஒரு நாயன ஒலிபோல் சுருண்டு வந்தது.

"உள்ளே யார் டீ.வி. பார்க்கிறா?"

"வேற யாரு? மாமனாரும், மாமியாரும்தான்!''

"இப்போ டிஸ்டர்ப் பண்ண வேண்டாம்னு பார்க்கிறேன். எப்போ வெளியே வருவா?"

"கரண்ட் ஆஃப் ஆனாத்தான்!"

"நான் வந்தது தெரிஞ்சிருக்குமா? என் பேச்சு சப்தம் கேட்டிருக்குமா?"

மாலதி சிரித்தாள்.

"இடி விழுந்தால் கூடத் தெரியாது. மெட்ராசிலே பூகம்பம் வந்தபோது எல்லாம் ஆடித்தே. ஆனா டீ.வி. முன்னாலே இருந்த இவங்க இரண்டு பேரும் கொஞ்சம்கூட ஆடலே... அசங்கலே.''

அவள் சொன்னது நிஜம்தான். டீ.வி. ரூமில் கொஞ்ச நேரம் தலையைக் காட்டிவிட்டு வெளியே வந்தேன். குஷ்புதான் ஸ்கிரீனிலிருந்து என்னைப் பார்த்துக் குளிர்ச்சியுடன் சிரித்த மாதிரி தெரிந்தது. வயசான இரண்டு பேரும் என்னைக் கவனித்ததாகத் தெரியவில்லை.

''என்னம்மா மாலதி? உன்னோட மாமனார் டீ.வி.யைப் பார்த்து உட்கார்ந்திருக்கார். ஆனா மாமியார் டீ.வி.க்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கார். புரியலையே? ஆமா, உன் மாமனாருக்குத்தான் கண் சுத்தமாகத் தெரிவதில்லையே. டீ.வி. எப்படிப் பார்க்கிறார்?''

''அதனாலென்ன. அவருக்குக் காதிலே பிராப்ளம் ஒண்ணுமில்லையே. 'ஒளி' இல்லேனாலும் டீ.வி.யிலிருந்து 'ஒலி' கிடைக்கிறதே!''

"புரியுது. ஆனா உன் மாமியார் ஏன் டீ.வி.க்கு முதுகைக் காட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கார்?''

''அதுவா. என் மாமியாரின் ஒரு விதமான தியாகம்னு வெச்சுக்கோங்கோ. 'திருதராஷ்டிரர்' பார்வை இல்லாத நிலையிலே, தான் இரண்டு கண்களையும் கட்டிக் கொண்டு இருந்த 'காந்தாரி' மாதிரி...''

''அட! அப்படியா? இந்த இருபத்தியோராவது நூற்றாண்டிலா? கணவராலே டீ.வி. பார்க்க முடியாதபோது தான் மாத்திரம் ஏன் பார்க்கணும்னு... இன்கிரெடிபிள்...''

மாலதி கோணல் பார்வை பார்த்து, மர்மமாகச் சிரித்தாள்.

''சரிதான், எல்லா ஆண்களுமே ஒரு விதத்தில் திருதராஷ்டிரர்கள்தான். ரூமுக்குள்ளே எட்டிப் பார்த்தேளே - அங்கே டீ.வி.க்கு எதிரே இருந்த காட்ரெஜ் பீரோ உங்க கண்ணில் படலையா? மாமியார் அந்த பீரோவின் ஆள் உயர கண்ணாடி வழியா குஷ்புவை ஒளிவு மறைவு இல்லாம பார்த்துக்கிட்டு இருக்காங்களே...''

நித்யஸ்ரீ, 'நிலா நிலா ஒளியோட... வந்தாள் வந்தாள் ஒரு மாது...' என்று மறுபடியும் பல்லவியைப் பாடினார்.

*You Can . . .*

# WIN 75% SCHOLARSHIP

## ON TOTAL FEE

**அறிவுத்திறனை நிரூபித்து.... வெல்லுங்கள்**

(சுலபத் தவணைமுறை வசதியும் உண்டு)

**SAT 2002** — **SCHOLARSHIP APTITUDE TEST**

**FOR DESERVING STUDENTS**

- மிகஅதிகமதிப்பெண் பெறுவோருக்கு 75% ஸ்காலர்ஷிப் வழங்கப்படும்.
- 75% அதற்கு மேலும் மதிப்பெண் பெறுவோருக்கு 60% ஸ்காலர்ஷிப் வழங்கப்படும்
- 60% அதற்கு மேலும் மதிப்பெண் பெறுவோருக்கு 50% ஸ்காலர்ஷிப் வழங்கப்படும்.

**இத்தேர்வுக்கு எவ்வித கட்டணமும் கிடையாது இத்தேர்வில் பங்கு பெறுவதற்கு அருகிலுள்ள CSCயின் ஏதேனும் ஒரு கிளையில் இலவசமாக ADMIT CARDஐ பெற்றுக் கொள்ளலாம்.**

**April**

**7**

**7-4-2002**

**SUNDAY**

Just Spend 15 minutes only

# CSC®

**COMPUTER EDUCATION**

**260 CENTERS ALL OVER SOUTH INDIA**

Also at Srilanka and Bangladesh

'அடடா பூவின மாநாடா?'னு கவிஞர் பழநி பாரதி வர்ணிச்ச மாதிரி, ஒரு வேளை பூக்களெல்லாம் சேர்ந்து மாநாடு நடத்தினா, அதுக்குத் தலைமை தாங்குகிற அழகும், புனிதமும் நிச்சயமா தாமரை மலருக்குத்தான்!

மிருதுவா, அழகா, இளஞ்சிவப்பா இருக்கிற காரணத்துக்காக, கடவுளின் திருப்பாதங்களை, தாமரைக்கு ஒப்பிட ஆரம்பித்து, இந்துக்களின் புனிதப் பூவாகவே அங்கீகாரம் கிடைச்சிடுச்சு.



தாமரைப்பூ குளிர்ச்சியான மலர். இலேசாகத் துவர்க்கும். நிறைந்த மருத்துவக் குணங்களுக்காகவே ஏகப்பட்ட ஸ்பெஷல் பாராட்டு பெற்றது.

இரத்த அழுத்த நோய்க்காரர்கள் வெண் தாமரை போட்டுக் காய்ச்சிய நீரில், ஒரு தேக்கரண்டி தேன் கலந்து அருந்த, இரத்த அழுத்தம் சீரான நிலைக்கு வரும்.

இருதயத்துக்கு இதமானது என்று என்னென்னவோ சொல்கிறார்களே! உண்மையில் இதயத்துக்கு இதமானதும், வன்மை தருவதும் தாமரைப்பூ சாறுதான். தாமரைப்பூக்களின் இதழ்களை உதிர்த்து, மர உலக்கையால் இடித்து, சாறு பிழிந்து வடிகட்டிக் கொள்ளவும். இந்த சாறு விதவிதமான நோய்களைத் துரத்தியடிக்கும்.

தாமரைப்பூ சாறுடன், பசு வெண்ணெய் கலந்து சாப்பிட்டு வந்தால், மூலநோய் குணமாகும். அதே தாமரைப்பூ சாறுடன் தேன் கலந்து சாப்பிட்டால் உடல் வலுப்பெறும்.

தாமரைப்பூ சாறுடன் இஞ்சிச் சாறு கலந்து அருந்தினால் இருமல் கட்டுப்படும்.

கிராமப்புறங்களில் காலரா நோய் கண்டதுமே, தாமரைப்பூ சாறு எடுத்து ஆளுக்கொரு மேஜைக்கரண்டி அளவு சாப்பிட்டுவிடுவார்கள். இயற்கையான நோய் எதிர்ப்பு சக்தி கிடைக்குமே! காலரா, ஜுரம் கண்டவர்களுக்கும் தாமரை சாறுதான் கண்கண்ட மருந்து. மூன்றே வேளையில் குணமாக்கிவிடும்.

பிரசவமான பெண்களுக்குத் தாமரைப்பூ கஷாயம் செய்து கொடுப்பதும் நம்மிடையே உள்ள வழக்கம்தான். இரண்டு தம்ளர் நீரில், ஒரு முழு பூவை உதிர்த்த இதழ்களை இட்டு, அரைத் தம்ளராகக் சுண்டக்காய்ச்சி வடிகட்டி, வெறும் வயிற்றில் அருந்தினால், அதிக ரத்தப் போக்கு உடனே நிற்கும். பலவீனமான தேகம் உடைய பெண்கள் நல்ல பலம் பெறுவார்கள்.

குளவியோ, தேளோ இல்லை அது போன்ற ஏதோ ஒரு விஷப்பூச்சியோ கடித்து விட்டால், உடனே இரண்டு வெண்தாமரைப் பூ இதழ்களுடன் நான்கு மிளகு சேர்த்து விழுது போல அரைத்து உள்ளுக்குள் தர, விஷம் 'மடமட'வென இறங்கும். அதே விழுதை கடி வாயிலும் பூச, கடுப்பும் வீக்கமும் குணமாகும்.

## மூலிகை கேலரி - 10

ராஜம் முரளி

கண்டகண்ட விளம்பரங்களைப் பார்த்து, ஏதேதோ மருந்து சாப்பிட்டு, சுய வைத்திய முயற்சிகளில் இறங்க வேண்டாம். வெண்தாமரை மகரந்தம் நூறு சதவிகிதம் நம்பகமானது. வெண் தாமரை மகரந்தத்தைத் தூள் செய்து, தேனில் கலந்து தினமும் சாப்பிட்டு வர, ஆண்களின் தாம்பத்ய பிரச்னை தீரும். தாது விருத்தி அடையும்.

ஒரு சிலருக்கு சதா காதில், பிராட்கேஜில்



போகும்.

**நா**ற்பது வயது தாண்டியதுமே, குடும்பம், ஆபீஸ், தொழில் என ஏதாவது பிரச்னை சூழ்ந்து கொள்ள, 'ஸ்ட்ரெஸ்' ஆரம்பித்து விடுகிறது. விளைவு? இருதய படபடப்பு, மனச் சோர்வு, இனம் புரியாத பயம் எல்லாம்!

மேற்கண்டவற்றால், அதிகமாக வியர்க்கும். உடல் சோர்ந்து போகும். வெண்தாமரைக் கஷாயத்தை, அதிகாலையில் வெறும் வயிற்றில் சாப்பிட்டுப் பாருங்கள். இருதயப் படபடப்பு இருக்காது. மனத்தில் அமைதியும், செயலில் தெளிவும் ஏற்படும். அப்போ, உங்கள் வோட்டு தாமரைக்குத்தானே!

தாமரைக்கு அழகு சேர்ப்பதே தட்டுத் தட்டாய் விரிந்த மினுமினு இலைகள்தான். தாமரை இலைக்கும் மருத்துவப் புகழ் உண்டு. தாமரை இலைகளைப் பறித்து, நிழலில் உலர்த்தி பொடி செய்து கொள்ளுங்கள். ஒரு டேபிள் ஸ்பூன் தாமரை இலைப் பொடியை, சந்தனக் கட்டையில்விட்டு பன்னீர்விட்டு அரைத்து முகத்தில் பூசிவர, வெண்ணிலா முகம் உங்களுடையதாகும்.

# உங்கள் வோட்டு தாமரைக்கே!

ட்ரெயின் போகும். மாவு மிஷின் இரைச்சல் கேட்கும். இன்னும் சிலருக்கு ஸ்பீக்கர் இரண்டும் அவுட்டாகி, மந்துமோ மந்தமாக இருக்கும். இத்தகைய பிரச்னைகள் இருப்பவர்கள், வெண் தாமரை மகரந்தத் தூளுடன், நாட்டுச் சர்க்கரை கலந்து, தினமும் இருவேளை சாப்பிட்டு வந்தால், செவிச் செல்வம் மீண்டும் கிடைக்கும்.

நாட்டு மருத்துக் கடையில் தாமரை விதை என கேட்டு வாங்குங்கள். அதனுடன் கசகசா, கிச்சிலிக் கிழங்கு சம அளவு சேர்த்து அரைத்து, தூளாக்கி, மேனியில் பூசிக் குளித்தால், சரும நமைச்சல் குணமாகும். படர் தாமரை, சொரி, சிரங்கு, அரிப்பு போன்ற சருமப் பிரச்னைகளும் காணாமல்

ஆண்களுக்கு மட்டுமல்ல, பெண்களுக்கும் வழுக்கை விழுகிறது என்பது அதிர்ச்சியான விஷயம். தலைமுடிக் கழன்று, கொத்து கொத்தாக வரத் தொடங்கியதுமே உடனடியாக கவனம் செலுத்த வேண்டும். கேர்லெஸ் ஆக இருந்தால் தலை ஹேர்லெஸ் ஆகிவிடும். தாமரைத் தண்டைப் பறித்து, சாறு எடுக்கவும். சம அளவு நல்லெண்ணெய் சேர்த்து, அடுப்பிலிட்டுக் காய்ச்சவும். நீர்ச் சடசடப்பு அடங்கி, தைலம் மிதக்கத் தொடங்கியதும், ஆறவிட்டு, பத்திரப்படுத்தவும். இந்தத் தாமரைத் தைலத்தை, தொடர்ந்து தடவுங்கள். கருகருவென முடி வளரத் தொடங்கும். கண்களும் குளிர்ச்சி அடையும் என்பது போனஸ் பலன்!

படங்கள் : ஸ்ரீஹரி



# ஹாட் நியூஸ் எர்ரய்யா!

ஆந்திர மாநிலம் சித்தூரில், நகர மத்தியில் உள்ள ஒரு சதுக்கத்தில், நாற்பது ஆண்டுகளாகச் செய்திப் பத்திரிகை ஒன்றை நடத்தி வருகிறார் எர்ரய்யா! இந்தப் பத்திரிகையில் உலகச் செய்திகள் முதல், உள்ளூர் ரேஷன் கடை நியூஸ் வரை எல்லா முக்கியச் செய்திகளும், ஆங்கிலம், தமிழ், தெலுங்கு மொழிகளில் நாள்தோறும் வெளியாகின்றன. சூட்டோடு சூடாகத் தரப்பட்டாலும், இந்தப் பத்திரிகை முழுக்க முழுக்க இலவசம்தான்.

ஏனென்றால், இது இரண்டரை அடிக்கு நாலரை அடி அளவுள்ள கரும்பலகை! அந்த போர்டின் பெயர் 'எசென்ஷியல் நியூஸ்!

இந்தச் செய்திக் கரும்பலகைக்கு பின்னால் ஒரு வரலாற்றுச் சம்பவமே இருக்கிறது.

சித்தூர் பாராளுமன்றத் தொகுதிக்கு, 1962ல் இடைத் தேர்தல் வந்தது. சுதந்திரா கட்சி வேட்பாளராக பேராசிரியர் என்.ஜி. ரங்காவும் காங்கிரஸ் சார்பில் டி.என். விசுவநாத ரெட்டியும் போட்டியிட்டனர். முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தேர்தலில், ரங்காவைத் தோற்கடித்தே ஆக வேண்டும் என்று அன்றைய ஆந்திர மாநில முதல்வர் நீலம் சஞ்சீவ ரெட்டி தேர்தல் பிரசாரத்தை முடுக்கியிருந்தார். தமிழ்நாட்டிலிருந்து, அன்றைய தமிழக முதல்வர் பக்தவத்சலம், கக்கன் போன்றோரும் சித்தூரில் முகா

மிட்டிருந்தனர். சுதந்திரா கட்சிக்கு ஆதரவாக அண்ணாவின் ஆணைப்படி, சித்தூர் மாவட்ட தி.மு.க. கழகத்தினர் அல்லும் பகலுமாக உழைத்தனர். இந்தக் கரும்பலகை ஆசிரியர் எர்ரய்யாவும் ராஜாஜிக்கு ஆதரவாக கூட்டங்களில் பேசி வந்தார்.

தேர்தல் முடிவு வந்தது. சுதந்திரா கட்சி வேட்பாளர் ரங்கா வெற்றி பெற்றார். அனைவருக்கும் அறிமுகமான எர்ரய்யாவிடம் பொது மக்கள் தேர்தல் முடிவு பற்றி கேட்ட வண்ணமிருக்க, எல்லோருக்கும் விளக்கமாகச் சொல்ல சிரமப்பட்ட எர்ரய்யா, ஒரு சிறிய போர்டில் தேர்தல் முடிவுகளை எழுதி வைத்தார்.

மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து படித்தனர். இவ்வளவு சுவாரசியமாக வந்து வாசிக்கிறார்களே என்று சந்தோஷப்பட்ட எர்ரய்யா, மறு நாளிலிருந்து செய்தித் தாள்களில் இடம் பெறும் முக்கிய செய்திகளை எழுத ஆரம்பித்தார். சொல்லப்படும் விஷயமும், எழுதப்படும் நேர்த்தியும் மக்களை வெகுவாகக் கவரவே, காலையில் தேநீர் குடிக்கப் போகும் விவசாயியிலிருந்து, அலுவலக ஆபீஸர் வரை 'எசென்ஷியல் நியூஸ் போர்டை', ஒரு பார்வை பார்க்காமல் போவதில்லை என்றாகிவிட்டது.

தமிழ், ஆங்கிலம், தெலுங்கு என மும் மொழிகளிலும் வெகுசரளமாக உள்ள எர்ரய்யாவின் படிப்பு என்னவோ, எஸ்.எஸ். எல்.சி. வரைதான். ஆனாலும் நாட்டு நடப்பு விஷயங்களை எல்லாம் விரல் நுனியில் வைத்திருக்கிறார்.

சித்தூர் சதுக்கத்தின் சென்சேஷனல் போர்டு என்று பிரபலமடைந்து விட்டதால் சித்தூர் மக்கள் ஏதாவது பொதுப் பிரச்னை என்றால் எர்ரய்யாவிடம் போர்டில் எழுதச் செய்து, சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் கவனத்துக்குக் கொண்டு செல்கிறார்களாம்.

இந்தத் தகவல் பலகை சமூக சேவையினால், ஏகப்பட்ட விருதுகளும், பட்டங்களும் கௌரவப் பதவிகளும் எர்ரய்யாவுக்குக் கிடைத்தாலும், நிறைய மிரட்டல்களும் வருகின்றனவாம்.

"கலப்பட வழக்கு, கொலை, லஞ்ச ஊழல், கடத்தல் போன்றவற்றுக்கு, நீதி மன்ற தீர்ப்பு வந்ததும் அதுபற்றி எழுத நேர்ந்தால், சம்பந்தபட்டவர்களிடமிருந்து மிரட்டல் வரும். ஆனால் அதற்கெல்லாம் நானா பயப்படுவேன்... நான் எதிர்ப்பிலேயே வளர்ந்தவனாச்சே!" என்கிறார் எழுபது வயது எர்ரய்யா!

தகவல் : **விஜய்**

படம் : **மதன்**

## அருள்வாக்கு



எல்லா வஸதியும் படைத்த ஒருவர் இருக்கிறார். அவருக்கு நல்ல தேஹாரோக்யமிருப்பதற்காக 'எக்ஸெர்ஸைஸ்' செய்ய வேண்டியிருக்கிறது. இதைச் செய்வதில் இரண்டு விதங்கள் இருக்கின்றன. ஒன்று, அவர் தேஹாப்யாஸம் என்று சொல்லப்படும் எக்ஸெர்ஸைஸ்கள் பண்ணலாம் - தண்டால் எடுக்கலாம். ஸர்வாங்காஸனம் போடலாம். அல்லது ஸகல அவயவங்களுக்கும் நன்றாக வேலை கொடுக்கும் விதத்தில் ஓடி ஆடி, வெட்டி கொத்தி ஏதாவது பண்ணலாம். இப்படி இரண்டாவது விதத்தில் அவர் ஓடி ஆடிப் பண்ணுகிறாரென்றால், அப்போது மற்றவர்களுக்கு ப்ரயோஜனமாகப் பழத் தோட்டம் போடுவது, அதற்காக வெட்டுவது கொத்துவது, ஜலம் இழுத்துவந்து கொட்டுவது என்று பண்ணுவதே ச்லாக்யமாகும். இவருக்குப் பண வஸதி, ஆள் வஸதி எல்லா வஸதியும் இருக்கிறது; அதனால் அவரே உழைத்துத் தோட்டம் போட்டுப் பயிர் பண்ண வேண்டுமென்றில்லை. இவருக்குப் பழமும் வேண்டுமென்றில்லை. இருந்த போதிலும் இவருக்கு மட்டும் ப்ரயோஜனப்படும்படி தண்டால் போடுவதைவிட, அல்லது எங்கேயோ நிர்மாநுஷ்யமான காட்டிலே மேட்டிலே போய் எதையோ வெட்டி, கொத்தி முறித்துக் கொண்டிருப்பதைவிட, நாலு ஜனங்களுக்கு உதவும்படியான பரோபகாரமாகத் தோட்டப் பணி செய்வதுதானே ச்லாக்யம்? பழம் என்ற பலன் இவருக்கு வேண்டாம். ஆனால் தேஹாரோக்யம் வேண்டும். அதற்காக இவர் செய்வதே, பழம் வேண்டிய வேறு யாருக்கோ உதவி பண்ணுகிறது.

இந்த மாதிரிதான் கர்மாவைக் கழித்துக் கொண்டு பரமாத்மாவிடம் சேர விரும்புகிறவர்களுக்கு சாஸ்த்ர கர்மா உள்பட அதனால் ஏற்படுகிற பலனும் வேண்டியதில்லை ஆனாலும், பரமாத்மாவிடம் சேருவதற்குண்டான பக்வத்தைப் பெறுவதற்காக மனஸை நாலா திசையிலும் ஓடாமல் சுத்தி செய்வதற்கு, ஆரம்ப தசையில் ஏதாவது கார்யத்தில் ஈடுபட்டால்தான் முடியுமென்றிருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

அலுவலகக்குறிப்பு சமர்ப்பிக்கப்படுகிறது -

அரசிடமிருந்து வந்த ஆணை, மேலான கவனத்துக்கு வைக்கப்படுகிறது. இந்த ஆணையின்படி மறைந்த தலைவர் திரு சின்னராசு அவர்களின் சிலை நிறுவத்தக்க வகையில் தயார் நிலையில் இருப்பதாகத் தெரிகிறது. மேற்படி தலைவரின் சிலையை வைப்பதற்கான தகுந்த இடத்தைப் பரிசிலனை செய்து, தக்க பரிந்துரைகளோடு அரசாங்கத்துக்குச் சமர்ப்பிக்கும்படி அரசு உத்தரவிட்டுள்ளது. ஆகவே, இது பற்றி ஆய்வு செய்து பரிந்துரை அனுப்பும்படி கோட்டப் பொறியாளரை அறிவுறுத்தலாம்.

ஆணைக்காக.

ஒப்பம், நேர்முக உதவியாளர்

ஒப்பம், தலைமை பொறியாளர்
(பொதுப் பணித்துறை)

அலுவலகக் குறிப்பு :

தலைவர் சின்னராசு அவர்களின் சிலையை வைப்பதற்கான அறிக்கையைக் கோட்டப் பொறியாளர் சமர்ப்பித்துள்ளார். கொடி 'அ' வில் காண்க. இதன்படி கோ. பொ. அவர்கள் கீழ்க்கண்ட இடங்களைப் பரிந்துரை செய்துள்ளார்.

1. நாலு ரோடு சந்திப்பு 2. ரயில் நிலையம் எதிரில் 3. பூங்காவின் பக்கம் 4. குளத் தங்கரை

மேற்கண்ட நான்கு இடங்களிலும் வாகனப் போக்குவரத்து அறிக்கைகளையும், சாலை வடிவம் பற்றிய விவரங்களையும் அனுப்பியுள்ளார். இவற்றைச் சரிபார்த்ததில் நான்கு இடங்களிலும் வரைபடத்தில் குறிப்பிட்டுள்ள நிலையில் சிலை நிறுவ எந்தத் தடையுமில்லை எனத் தெரிகிறது.

ஆகவே, இவ்விடங்களைப் பரிந்துரை செய்து அரசுக்கு அனுப்பலாம்

தக்க ஆணைக்காக.

ஒப்பம், நே.2

அனுப்பலாம்
ஒப்பம், த.பொ.

அ.கு. சமர்ப்பிக்கப்படுகிறது.

அரசாங்கத்திடமிருந்து திருப்பி அனுப்பப்பட்ட அறிக்கை தங்கள் மேலான கவனத்திற்கு வைக்கப்படுகிறது. இதில் அறிக்கை அரைவேக்காடாக அனுப்பப்பட்டதற்கு ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என விளக்கம் கேட்கப்பட்டிருக்கிறது.

சிலை நிறுவுமிடத்தில் வாகனப் போக்குவரத்து அறிக்கையையும், சாலை வடிவ விவரத்தையும் மட்டும் இணைத்திருப்பது எந்தப் பயனும் தராது என்றும், சிலை நிறுவப்பட்டால் அதன் பயனாக எந்த வகையில் அது ஊரைப் பாதிக்கும் என்பதை



**ராஜகீழ்பாக்கத்தான்**

ஆய்ந்து அதன் அடிப்படையில் இடத்தைத் தேர்ந்தெடுத்து அறிக்கை அனுப்பும்படி அரசு உத்தரவிட்டுள்ளது.

ஆகவே, கோட்டப் பொறியாளரிடம் தக்க மாற்று அறிக்கை அனுப்பும்படி கேட்கலாம். கூடவே இவ்வகை அறிக்கையை அனுப்பாததற்கான விளக்கமும் கேட்கலாம்.

ஆணைக்காக.

ஒப்பம், நே.2

நே.2 பேசவும்/கோ.பொ.விளக்கம் எதுவும் கேட்க வேண்டாம்.

த.பொ.

அ.கு. தொடர்ச்சி : பேசப்பட்டது!

தலைமை பொறியாளர் அளித்த விளக்கப்படி அ.கு. திருத்தப்படுகிறது. த.பொ. அவர்கள் அமைச்சரிடம் பேசியதிலிருந்து சிலை நிறுவப்பட வேண்டிய இடம் வாஸ்து சாஸ்திரத்தின் அடிப்படையில் அமைய வேண்டுமென்று தெரிகிறது.

ஆகவே கோட்டப் பொறியாளரை 'வாஸ்து' வின் படி சிலை நிறுவும் இடத்தைத் தேர்வு செய்து உடனே அனுப்பும்படி கேட்கலாம்.

ஒப்பம், நே.2

# சிலை, உன் நிலை!

குறைந்த பட்சம் மூன்று 'வாஸ்து' யோசனைகளைப் பெறுமாறு கோ.பொ.ஐ அறிவுறுத்தவும்!

த. பொ.

அ.குறிப்பு :

கோட்டப் பொறியாளரின் கடிதம் பார்வைக்குச் சமர்ப்பிக்கப்படுகிறது. அதில் கோ.பொ. 'வாஸ்து' வாசுதேவன், 'வாஸ்து' வரதராஜன், 'வாஸ்து' வடிவேலு ஆகியோரிடம் பெற்ற 'ஆலோசனையை அனுப்பியுள்ளார். இந்த மூன்று நபர்களும் தலைவர் சின்னராசு அவர்களின் ஜாதகக்குறிப்பைக் கேட்பதாகத் தெரிகிறது. ஜாதகக் குறிப்பின் அடிப்படையில்தான் சிலை நிறுவும் இடத்தை வாஸ்துப்படி கணிக்க முடியும் என்று மூவரும் கருதுவதால் தலைவரின் ஜாதக விவரத்தைத் தேடி

அவரது ஊரான எரும்மாடு பாளையத்திற்கு உதவிப் பொறியாளரை அனுப்பியிருப்பதாக கோ.பொ. அறிவித்திருக்கிறார்.

வாஸ்து மற்றும் பயணச் செலவுகளை எந்த கணக்கின் கீழ் கொண்டு வருவதென்றும் கோ.பொ. கேட்டுள்ளார்.

ஒப்பம், நே.2

செலவைப் பற்றிக் கேட்டதற்கு கோ.பொ.விடம் விளக்கம் உடனே கேட்கவும்!

த.பொ.

அ.குறிப்பு :

செலவினங்களைப்பற்றி கேட்டதற்காக கோ.பொ. மன்னிப்பு கடிதம் அனுப்பியுள்ளார். இனிமேல் இதுபோன்ற அவசியமில்லாதவற்றுக்கு விபரம் கேட்கமாட்டேனென்று ஒப்புதல் அளித்துள்ளார்.

மேலும் தலைவர் சின்னராசு ஜாதகத்தைத் தேடிப் போனதில் அவரது வீட்டில் ஜாதகம் கணிக்கும் வழக்கமேயில்லை என்பதால் அது கிடைக்கவில்லை என அறிவித்துள்ளார். தலைவர் சின்னராசு ஆட்சியில் இருந்தபோது எதிர்க்கட்சித் தலைவர் ஏகாம்பரம் "சின்னராசுவின் ஜாதகமே என் கையிலே" என்று ஒரு பொது மேடையில் பேசியிருப்பதால் அவரிடமும் போய் சின்னராசு அவர்களின் ஜாதகத்தைக் கேட்டதாகவும் அப்படியும் கிடைக்கவில்லை எனவும் தெரிவித்துள்ளார்.

தமக்கு தக்க அறிவுரையளித்தால் இது சம்பந்தமாக மேல் நடவடிக்கை எடுக்கலாமென்று கோ. பொ. கேட்டுக் கொண்டுள்ளார்.

ஒப்பம், நே.2

நாடி ஜோதிடம் பார்த்து ஜாதகம் கணிப்பது ஏன் கோ.பொ. மூளைக்கு எட்டவில்லை என விளக்கம் கேட்டு உடன் நடவடிக்கை எடுக்கச் சொல்லவும்.

ஒப்பம், த.பொ.

அ. குறிப்பு :

நாடி ஜோதிடத்தால், தலைவரின் ஜாதகத்தைக் கணிக்க கோ. பொ. சென்றதாகவும், அதற்கும் தலைவரின் கட்டை விரல் ரேகை தேவைப்படுவதால் அதுவும் சாத்தியமில்லை எனவும் கோ. பொ. தெரிவித்துள்ளார். மேலும் தலைவர் சின்னராசுவின் பிறந்த தேதி விவரம் எதுவும் கிடைக்காததால், அவருடைய குணாதிசயங்கள் மற்றும் வாழ்க்கை அனுபவங்களை வைத்து எண் கணித முறைப்படி அன்னார் எந்த எண்காரர் என்பதை அறிய 'நியூமராலஜி பாலாஜி' அவர்களை ஆலோசனை கேட்டிருப்பதாகவும் அவரிடமிருந்து ஆலோசனை பெற்றதும் இது குறித்து மேல் நடவடிக்கை எடுப்பதாகவும் தெரிவித்துள்ளார்.

ஒப்பம், நே.2

கூடவே தலைவரின் கையெழுத்துப்படி கிராஃபாலஜி கொண்டும் ஜாதகத்தைச் சரி பார்க்க கோ.பொ. வை அறிவுறுத்தவும்.

த.பொ.

அ. குறிப்பு

தலைவர் சின்னராசு அவர்களின் ஜாதகம் கணிக்கப்பட்டுவிட்டதாகவும், அவர் ராசியின்படி அவர் சிலையை ஊரின் தென் கோடியில்தான் வைக்க வேண்டுமென்றும் வாஸ்து நிபுணர்களின் ஒருமித்த கருத்து என கோ.பொ. தம் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் தென்கோடியில் சிலை வைப்பதற்கான இடத்தைப் பற்றிய அறிக்கையையும் இணைத்துள்ளார்.

இந்தப் பரிந்துரையை, வாஸ்து, எண் கணிதம், கிராஃபாலஜி மற்றும் நாடி ஜோதிட அறிக்கைகளை இணைத்து அரசுக்கு அனுப்பலாம்.

தக்க ஆணைக்காக,
ஒப்பம், நே.2

சரி!

ஒப்பம், த.பொ.

அ. குறிப்பு :

தலைவர் சின்னராசுவின் சிலையை வைக்க கோ.பொ. பரிந்துரை செய்த ஊரின் தென்கோடி இடம் சுடுகாடாக அமைந்ததில் அரசு கடுமையாக அவரை எச்சரித்து தென் கோடி மாவட்டத்துக்கு மாற்றல் செய்ய உத்தரவிட்டிருக்கிறது.



அதன்படி கோ.பொ.வின் மாற்றல் உத்தரவு இத்துடன் வைக்கப்பட்டுள்ளது.

மேலும் தலைவர் சின்னராசு தமது சிறு வயது வாலிபத்தில் அனேகமாக குளத்தங் கரையிலேயே கழித்ததாக அவர் வயதையொத்த பாட்டிமார்களிடம் சர்வே செய்து தகவல் பெற்றுள்ள நிலையில், அவர் சிலையை அங்கே நிறுவுவதுதான் உத்தமம் என அரசு தன் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளது.

ஆகவே புதிதாக மாற்றம் செய்துள்ள கோட்டப் பொறியாளரிடம் சிலையை, குளத்தங்கரையில் அமைக்க, தக்கவாறு வாஸ்து மற்றும் மற்ற ஜாதக அறிக்கைகளில் மாற்றம் செய்து பரிந்துரை வழங்குமாறு கேட்டுக் கொள்ளலாம்.

ஒப்பம, நே.2

ஒப்பம், த.பொ.

அ. குறிப்பு :

குளத்தங்கரையில் பிள்ளையார் கோவில் எதிரே இருக்கும் ஒரே காலியிடமான எட்டுக்கு எட்டில் தலைவர் சின்னராசு சிலை அமைக்க பரிந்துரையோடு மற்ற ஜாதகங்களையும் கோட்டப் பொறியாளர் திருப்தியளிக்கும் வகையில் சமர்ப்பித் துள்ளார்.

இதனை அப்படியே அரசுக்கு அனுப்பலாம்.

சரி! சரி!

த.பொ.

சிலை திறப்பு விழா

"கூடியிருக்கும் சகோதர, சகோதரிகளே, கழகத் தோழர்களே! தலைவர் சின்னராசு அவர்களின் சிலை திறப்பு விழாவுக்கு வருகை தந்திருக்கும் அன்பு உள்ளங்களே!

மூட நம்பிக்கை, மூட பழக்கவழக்கங்கள், சாஸ்திரம், சம்பிரதாயங்கள் என்று சமுதாயம் சீரழிந்திருந்த கால கட்டத்தில் அவற்றை எல்லாம் தகர்த்து, பகுத்தறிவுச் சிங்கமாய், பாழான பழக்கங்களுக்குச் சிம்ம சொப்பனமாய் நம்மிடையே வாழ்ந்து நம்மையெல்லாம் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்த தலைவர் சின்னராசு அவர்களின் சிலையைத் திறந்து வைப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்! வீழ்க மூட நம்பிக்கை! வாழ்க அன்னாரின் பகுத்தறிவுச் சிந்தனை!"

அமைச்சர் பேசும்போது யாரோ மேடையருகில் சிரித்தார்கள். அட! நம்ம சின்னராசுதான். சிலையாகிவிட்டாலும் அவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ●

• 'கண்மணி நீ வ... காத்திருந்தேன்' படத்தில் ஷ்யாம்

அழகிப் போட்டியில் கிரீடம் சூட்டிக் கொள்கிற தேவதைகள் சமூகத்திற்கு விடுக்கும் முதல் செய்தி சினிமாவில் நடிக்க மாட்டேன் என்பது. த்ரிஷா, மணிரத்னம் அழைப்பையே மறுத்த மிஸ் சென்னை. இப்போது 'கண்மணி நீ வரக் காத்திருந்தேன்' படத்தின் கதாநாயகி. த்ரிஷா எங்கேயாவது மாட்டுவார் என்று காத்திருந்தபோது வாசன் இல்லத்தில் வசமாய் சிக்கிக் கொண்டார்.

மஞ்சள் ரோஜாக்கள் நிறைந்த பச்சை நிறக் குடையைப் பிடித்தபடி ஒயிலாக நடந்து வந்த த்ரிஷா மீது செயற்கை மழையைத் தண்ணீர் லாரி உபயத்தோடு பொழியச் செய்தார்கள்! இயக்குவர் பிரிய



# உயிர் வந்த தேவதை!

தர்ஷன் 'ஷாட் ஓகே' என்றதும் கிடைத்த இடைவெளியைப் பயன்படுத்தி த்ரிஷாவை மடக்கினோம். கேள்வி கேட்கும் முன்னரே த்ரிஷாவிடமிருந்து வந்த பதில் ஒரு நயாகரா புன்னகை! சும்மாயில்லை; மிஸ் இந்தியா போட்டியில் மிஸ் ப்யூட்டிஃபுல் ஸ்மைல் பட்டத்தைத் தட்டிவந்த சிரிப்பழகி அல்லவா!

"கன்னத்தில் முத்தமிட்டால் படத்தில் எனக்குச் சிம்ரன் ரோல் தரேன்னு மணிரதனம் சார் சொன்னபோது ரொம்ப லக்கின்னு நினைச்சேன். ஆனா அப்போ நான் இன்னும் சின்ன பொண் . இரண்டு குழந்தைக்கு அம்மாவா நடிக்கிற அளவுக்கு மெச்சூர்டு லுக் இல்லேன்னு ஃபீல் பண்ணினேன். அதனால் அத்தனைப் பெரிய வாய்ப்பு கிடைச்சும்

ஏத்துக்க முடியலே! அப்புறம் ஷங்கர் சார் 'இன்வைட்' பண்ணினதும் பெரிய சர்ப்பிரைஸ்! அப்போ ப்ளஸ் டூ படிப்பை விட்டுட்டு வர முடியலே! படிப்பு முடிஞ்சதும் மாடலிங், விளம்பரன்னு தீவிரமாய் இறங்கிட்டேன். நான் மியூசிக் மெச்சரா பண்ணின 'ஃபேர் அண்ட் லவ்லி' விளம்பரம் இந்தியாவுல இருக்கிற அத்தனை மொழியிலேயும் 'டப்' ஆனதும், விளம்பரம் மூலமாவே எனக்கு நிறைய ரசிகர்கள். பாலிவுட்டிலிருந்து கூட கூப்பிட்டாங்க. ரொம்ப தயக்கமாவும் குழப்பமாகவும் இருந்தது. சரிசரி முதல் முதல்லே ஒரு டெஸ்ட் ரவுண்ட் செஞ்சு பார்க்கலாமேன்னு ஒரு மியூசிக் வீடியோவில் நடிச்சேன்.

"பல்குனி பதக் - வடக்கே பாப்புலர் பாடகி.. அவங்க பாடின "மேரி சுன்னா வுட் வுட் சாயே" பாடலை வீடியோ ஆல்பமா எடுக்க, அதுல நான் முதன் முறையா நடிச்சேன். அத்தையோட கட்டுப்பாட்டில் தனிமையில் இருக்கும் ஒரு பெண்ணுக்கு அவ வீட்ல இருக்கும் ஓர் ஆளுயர பெண் ஓவியம்தான் துணை. அந்த ஓவியத்துக்கு உயிர் வந்து அந்தப் பெண் கூட தோழியா ஆகிற மாதிரி கான்செப்ட். அந்த உயிர் ஓவியம் யார் தெரியுமா? நான்தான்.." என்று நிறையவே வெட்கப்பட்ட த்ரிஷா, "பிரியதர்ஷன் படத்தில் வாய்ப்புக் கிடைத்தது அதிர்ஷ்டம்" என்று அடுத்த ரவுண்ட் ஆரம்பித்தார்.

"தபு மாதிரி பெரிய ஆர்ட்டிஸ்ட் பல பேரை அறிமுகப்படுத்தி, அதோடு விட்டுடாமே தொடர்ந்து தன்னோட படங்களில் அவங்களுக்கு வாய்ப்புக் கொடுத்து 'மோல்டு' பண்ணி விடும் பெரிய டைரக்டர் பிரியதர்ஷன்.

"தயாரிப்பாளர் விக்ரம் சிங். '12B'ன்னு தமிழுக்கு முழுக்க முழுக்க ஒரு புது சினிமா கொடுத்தவர். ஒளிப்பதிவாளர் திரு. இசையமைப்பாளர் ஹாரிஸ் ஜெயராஜ். இப்படி பெரிய பெரிய எக்ஸ்பர்ட்ஸ் கைகோத்திருக்கிற படத்துலே அறிமுகம்ன்னா கசக்குமா?" என்று திருப்பிக் கேட்கிறார்.

"இனி விளம்பரங்களுக்குக் குட்பைதானா த்ரிஷா?" என்றால், "அப்படியெல்லாம் இல்லை, ஆனால் முழு கவனம் இனி சினிமா மேலதான்" என்கிறார். 'எனக்கு இருபது உனக்கு பதினெட்டு', 'மௌனம் பேசியதே' என்று பிஸியாகி ஜோதிகா, லைலா சமூகத்தில் பீதியை உண்டு பண்ணியிருக்கிறார் இந்த நுங்கம்பாக்கம் அழகு நங்கை.

— ஸ்ரீ சக்கரம்



அக்கினேனி லட்சுமி வரப்ரசாத ராவ் என்கிற எல்.வி. பிரசாதைப் பேட்டி கண்டது மறக்க முடியாத அனுபவம். என் மனத்தில் மூடிக் கிடந்த பல ஜன்னல்களைப் பட்டென்று திறந்தது அவரது பேச்சு. என் வாழ்க்கைப் பார்வையை முற்றிலும் மாற்றக்கூடிய கருத்துகளை நெஞ்சில் பதியும்படிச் சொன்னார் அவர்.

பொதுவாக திரைப்பிரமுகர்கள், தோற்றத்தில் அக்கறை செலுத்துவார்கள். தங்களைப் பற்றிய முழு விவரங்களைத் தயார் செய்து வைத்து, பேட்டி காண்பவரின் கையில் கொடுத்து விடுவார்கள். அவர்களால் அதிக நேரம் செலவழிக்க இயலாது. பலரும் தங்களைப் பற்றிய செய்திகள் சரியாகவோ தப்பாகவோ பத்திரிகைகளில் வந்து கொண்டே இருக்க வேண்டுமென நினைப்பார்கள்.

எல்.வி. பிரசாத் முற்றிலும் மாறுபட்டிருந்தார். உதிரிப் பாத்திரம் முதல் கதாநாயகன் வரை அவர் போடாத வேஷமில்லை. ஏழை விவசாயி மகனாகப் பிறந்து பெரும் தயாரிப்பாளராகவும் இயக்குநராகவும் உழைப்பால் உயர்ந்தவர். கமலஹாசனுடன் நடித்த ராஜபார்வைத் தாத்தா. பிரசாத் லேப் உள்படப் பல நிறுவனங்களின் உரிமையாளராக, திரையுலகின் பல்வேறு துறைகளில் ஒளிவீசிக் கொண்டிருந்த அவரை நான் சந்தித்தது அவர் காலமாவதற்குச் சில ஆண்டுகள் முன்பு. அவரது எழுபத்து நான்காம் வயதில்.

அரைமணி சந்திக்க அனுமதி கேட்டிருந்தேன். அவர் பேச்சில் நான் மயங்கியதை அவர் உணர்ந்தார். என்ன நினைத்தாரோ தெரியவில்லை. என் அதிர்ஷ்டம், பிற பணிகளையெல்லாம் தள்ளிப்போட்டுவிட்டு நான்கு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

அது வெறும் பேட்டிக்கான பேச்சு மட்டுமல்ல. நான் பிறகு பேட்டிக் கட்டுரையும் எழுதினேன். சுருக்கமாகத்தான் எழுத முடிந்தது. அப்போதைய தருணம் அப்படி. அது தகவல் பேட்டி என்ற எல்லையோடு நின்றுவிட்டது. இதோ இந்தக் கட்டுரையில் நான் பகிர்ந்து கொள்ளும் விஷயங்களை அப்போது எழுத வாய்ப்பு நேரவில்லை.

ஆனால் அவரைச் சந்தித்த பிறகு, எனக்கு எப்போது சோர்வு வந்தாலும், அந்தச் சந்திப்பை மறுபடி மறுபடி மனத்தில் எழுதிக் கொண்டே இருக்கிறேன். பிரசாதின் அகராதியில் சோர்வு, மனத்தளர்ச்சி, நம்பிக்கையின்மை போன்ற சொற்களுக்கெல்லாம் இடமே கிடையாது.

பொதுவாக, ஏழையாயிருந்து படிப்படியாக முன்னேறிச் செல்வந்தர் ஆனவர் பலர். பிரசாதின் வாழ்வு விந்தையானது. அந்த ஏழை விவசாயி மகன் பெரும் செல்வந்தராகி, மறுபடிப் பரம ஏழையாகி, மீண்டும் மாபெரும் செல்வந்தரானவர். கதாநாயகனாக நடித்து கைநிறையப் பணத்தை வாரினார். துணை இயக்குநராகி, பின் இயக்குநராக உயர்ந்தார். சந்தர்ப்பவசத்தால் வேலை போய், கையில் இருந்த பணமெல்லாம் இழந்தார். கதாநாயகனாக நடித்த படம் ஓடிக்கொண்டிருந்த ஒரு திரையரங்கிலேயே வாயில் காப்போன் பணியில் சேர்ந்தார். அது சில ஆண்டுகள். காரும் பங்களாவுமாக இருந்தவர் பிஸ்கட்டும் டீயும் சாப்பிட்டு வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி வாழ்ந்த காலங்கள். மறுபடியும் அவர் ஆற்றலில் நம்பிக்கை வைத்த நண்பரின் உதவியால் நடிக்கத் தொடங்கினார். தயாரிப்பாளரானார்.

# மறக்க முடியாத

மெள்ள முன்னேறிக் கோடீஸ்வரரானார். அண்மைக்கால நளமகாராஜா அவர். சினிமாவும் ஒரு சூதாட்டமோ! வெற்றி தோல்விகள் இப்படியா ஒரு மனிதரை இந்தக் கோடிக்கும் அந்தக் கோடிக்கும் அலைக் கழிக்கும்!

'பணமெல்லாம் போய்ப் பரம ஏழையான போது, எப்படி சகித்துக் கொண்டீர்கள்?' - என் கேள்வியை அமைதியாக எதிர்கொண்டு பொறுமையாக பதில் சொன்னார்.

'வாழ்க்கை அந்தந்த சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தவாறு மனத்தை அயர்ன் செய்து கவலைச் சுருக்கங்களைப் போக்கி விடுகிறது. எல்லா நிலைமையுமே தற்காலிகம்தான். வாழ்வே தற்காலிகம் என்ற உணர்ச்சி இருந்தால் எதுவும் நம்மை பாதிக்காது."

"மீண்டும் பெரிய செல்வந்தர் ஆவோம் என நம்பினீர்களா?"

"செல்வந்தர் ஆவது பற்றி நான் அக்கறை கொள்ளவில்லை. அது நேர்ந்தது குறித்து சந்தோஷம்தான். நேராதிருந்தால் பெரிதாய்ப் பாதிக்கப்பட்டிருக்க மாட்

## திருப்பூர் கிருஷ்ணன்



# மனிதர் எல்.வி.பிரசாத்!

டேன். ஆனால் என் ஆற்றலை நிருபிக்க மீண்டும் சந்தர்ப்பம் தேடி வரும் என உள் மனத்தில் ஆழமாக நம்பிக் காத்திருந்தேன். நான் நினைத்தபடியே என் நண்பர் மூலம் தேடி வந்தது!"

"அப்படி ஒரு சந்தர்ப்பம் வராதிருந்தால்?"

"அவ்விதம் நேரவே நேராது. ஒரு துறையில் முன்னுக்கு வர வேண்டும் என மனப்பூர்வமாக ஆசைப்பட்டுக் கடின முயற்சியையும் மேற்கொண்டால் இயற்கை சந்தர்ப்பங்களை நம் முன்னால் கொண்டு வந்து நிறுத்தும். இது மாறாத ஒரு விஞ்ஞான விதி.

"இருக்கட்டும். என்றாலும் ஒரு வாதத்திற்காகக் கேட்கிறேன். அந்த விஞ்ஞான விதி உங்கள் வாழ்வில் செயல்பட்டிருக்கவில்லை என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது என்னவாகி இருப்பீர்கள்?"

"இது போலவே சந்தோஷமாகத்தான் இருப்பேன். டீயும் பிஸ்கட்டும் மட்டும் சாப்பிட்டு வாழ்ந்த காலத்திலும் சந்தோஷமாகத்தான் இருந்தேன். உடல் ஆரோக்கியமாக இருந்தால் போதும். ஒரு வயிற்றுச் சாப்பாட்டுக்கு எப்படியும் உழைத்துச் சம்பாதிக்க முடியும். பிறகென்ன? நல்ல சினிமாக்கள் பார்ப்பது, கலைகளை ரசிப்பது, ஆகாயத்தையும் கடலையும் மனமார வியப்பது.... வேறென்ன வேண்டும் வாழ்க்கையில்? இப்போது பணமிருக்கிறது. புத்தகங்களை விலை கொடுத்து வாங்கிப் படிக்கிறேன். பணம் இல்லாதிருந்தால் இதே புத்தகங்களை நூலகங்களில் இலவசமாகப் படித்திருப்பேன். கொஞ்சம் பணம் தேவை. அதிகப் பணம் வந்தாலும் நல்லதுதான். ஆனால் அதிகப் பணத்தால் நம் சந்தோஷம் கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எத்தனையோ செல்வந்தர்கள் அடையாத நிம்மதியையும் மகிழ்ச்சியையும் பல பூக்காரிகளும் ஆட்டோ டிரைவர்களும் அடைந்திருப்பதை நான் அறிவேன். எதையும் ரசிக்கிற மனம் முக்கியம். மற்றவை இரண்டாம் பட்சம்தான்.

அவர் பேசப் பேச அந்தப் பேச்சைக் காதுகளால் பருகியவாறே அமர்ந்திருந்தேன். இது போன்ற கருத்துகளைப் பலரும் சொல்லலாம். ஆனால் அவர் தமது வாழ்வில் அனுபவித்தும் கடைப்பிடித்தும் அல்லவா இந்தக் கருத்துக்களைச் சொல்கிறார்! அவர் பேச்சு மனத்தில் அம்பு போல் தைத்தது. இன்னும் நிறையப் பேசினார்.

"பணம் சம்பாதி. நிறைய சம்பாதி. ஆனால் பணத்தை மதிக்காதே. பணம் வரவில்லையென்றாலும் வருந்தாதே. ஏனென்றால் பணமல்ல வாழ்க்கை. ஆரோக்கியம் முக்கியம். எதையும் ரசிக்கக் கற்றுக்கொள். நமக்கு ஏற்படும் கஷ்டமான அனுபவங்களைக்கூட..." இதுதான் அவர் பேச்சின் சாரம்.

'உங்களை இனி என்னால் மறக்கவே முடியாதென்று தோன்றுகிறது. பேட்டிக்காக அல்ல. எனக்கென்று ஏதாவது சொல்லுங்களேன்.' - அன்பும் மரியாதையும் ததும்ப அவரைப் பார்த்துக் கேட்டேன்.

'எந்தச் சூழ்நிலையிலும் தலைமேலேயே இடி விழுந்தால்கூட, சோர்வு அடையாதீர்கள். கடினமாக உழைப்பதற்கு மனம் இருந்தால் வாழ்க்கையை என்று வேண்டுமானாலும் புதிதாய்த் தொடங்கிக் கொள்ளலாம்.'

அவரிடம் கைகூப்பி விடைபெற்று வெளிவந்தபோது ஓர் அரையடி உயரம் கூடினாற்போல் இருந்தது எனக்கு. என் மனத்தின் உயரம் அது.

# குபீர்னு சிரிங்க!



''பெண் பார்க்க வந்த இடத்தில் மெகா சீரியல் பார்த்தாகணும்னு வரனும் தாயாரும் அடம் பிடிச்சாங்களாமே?''

''மாப்பிள்ளையோட அம்மா பயங்கர மெகா சீரியல் ரசிகையாம்; மாட்டுப் பொண்ணா வரப் போறவ கண்ணீர்விட்டு அழறாளான்னு டெஸ்ட் பண்ணினாங்களாம்!''

- மங்கை



''என்னடா இது! உன் பொண்ணைப் போய் 'அண்ணி'னு கூப்பிடறே''

''என்ன செய்யறது? என் மனைவிக்கு 'அண்ணி' சீரியல் ரொம்பப் பிடிச்சுப் போய், குழந்தைக்கு 'அண்ணி'ன்னு பேர் வைச்சிருக்கா!''

- என்.உஷாதேவி



''ஐயா சாமி... செல் போன் பில் கட்ட தர்மம் பண்ணுங்க, சாமி....''

- எஸ்.எஸ்.பூங்கதிர்

• பாரிஸ்டர் ரஜினிகாந்த



இன்றைக்குத் திசைக்கு ஒரு சபா இருக்கிறது. ஐம்பது வருடங்களுக்கு முன், மத்திய தரக் குடும்பங்களுக்கு மாலை நேரம் பொழுது போக்குக்கு, சபாக்களை விட்டால் வேறு வழியில்லை. அதிலும் ஆர்.ஆர் (ரசிக ரஞ்சனி) சபா 'புது மெம்பர்களை

# கல்லூரியில் பிறந்த கலைப்பணி!



• ராஜகோபாலன்

இனி சேர்க்க முடியாது!' என்று உறுப்பினர்களுக்கு உச்சவரம்பு கொண்டு வந்தபோது, களத்தில் குதித்தார் தபால் துறையில் வேலை பார்த்துக்கொண்டிருந்த ராஜகோபாலன் என்ற இளைஞர்.

"நீங்கள் அரங்கத்தை மட்டும் எங்களுக்கு வாடகைக்குக் கொடுங்கள். நாங்கள் நிகழ்ச்சிகள் நடத்திக்கொள்கிறோம்!" என்று ஆர்.ஆர் சபா நிர்வாகிகளைக் கேட்டார். அதற்கும் கையை விரித்துவிட்டார்கள். பார்த்தார் ராஜகோபால். விவேகானந்தா கல்லூரியில் அனுமதி வாங்கி, அங்கே திறந்தவெளி அரங்கில், ஜி.என்.பி.யின் மாணவர் டி.ஆர். பாலசுப்பிரமணியத்தின் கச்சேரியோடு, மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப்பைத் தொடங்கினார். தேதி ஏப்ரல் 29, 1951. துவக்க விழாவுக்குத் தலைமை வகித்தவர் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி. பிறகு தொடர்ந்து மாடி ஹாலில் கச்சேரிகள், நாடகங்கள் நடந்தன. ஹாஸ்டல் மாணவர்கள் கொஞ்சம் கூச்சல் போட்டாலும், நிகழ்ச்சிகள் தடைபடவில்லை.

'தேவகியின் கணவன்' என்று ஒரு நாடகம். அதில் பிரபாகரன் என்பவர் ஒரு டயலாகில், "ஏண்டா இப்படி இளைச்சுப் போயிட்டே?" என்ற கேள்விக்கு, 'விவேகானந்தா கல்லூரி ஹாஸ்டல்ல தங்கிப் படிக்கிறேனா, அதான் உடம்பு இளைச்சுப் போச்சு!' என்று பதில் சொன்னார். மாணவர்களுக்கு வந்ததே கோபம்! "டிராமாவை நிறுத்து, மன்னிப்புக் கேளு!" என்று ஒரே கலாட்டா.

ராஜகோபால் இளைஞர் என்றாலும், அன்றே அநாவசிய வம்பு தும்புகளில் தலை நுழைக்காதவர். பக்கத்திலிருந்த 10, ஆலிவர் ரோடில் இருந்த ஆறு கிரவுண்டு காலி மனையை, மாதம் நூறு ரூபாய் என்று குத்தகைக்கு எடுத்தார். ஒரு கீற்றுக்கொட்டகை போட்டு, நாற்காலிகளை அமைத்து, சபா என்ற உருவம் கொடுத்தார். ஜனவரி 28 அன்று, சென்னை கவர்னராக இருந்த மைசூர்

மகாராஜாவைக் கொண்டு திறப்பு விழா நடத்தினார்.

அடுத்த வருடம் பிப்ரவரியில் டிகேஎஸ், சகஸ்ரநாமம், மனோகர் எல்லாம் நாடகங்கள் போட, சபா சூடு பிடித்தது. மனோகர் நாடகத்துக்காக, ஸ்டேஜையே பெரிதாக்க வேண்டியிருந்தது. சிவாஜியின் 'தங்கப்பதக்கம்' நாடகம் போடப்பட்டபோது ஸ்பெஷல் க்ரீன் ரூமே கட்ட வேண்டி வந்தது! உறுப்பினர்களின் எண்ணிக்கையை மனத்தில் கொண்டு, ஒரே நாடகத்தை இரண்டு நாட்களுக்குப் போட்டார்கள்.

காத்தாடி, கூத்தபிரான், சோ, பாலசந்தர், மேஜர், மௌலி, ஒய்.ஜி.பி., விசு, பூர்ணம், வி.கோபாலகிருஷ்ணன், ஏவி.எம். ராஜன், டி.எஸ். சேஷாத்ரி என்று டஜன் கணக்கில் நாடகக் குழுக்கள் மயிலாப்பூர் மட்டுமல்லாது சென்னை ரசிகர்களை மகிழ வைத்தன.

"1968 முதல் 1974 இருக்கிறதே அதைத் தமிழ் அமெச்சூர் நாடகங்களின் பொற்காலம் என்று சொல்ல வேண்டும். போட்டி போட்டுக்கொண்டு புதுப் புது நாடகங்கள். ஐம்பது ஷோ, நூறு ஷோ எல்லாம் சர்வ சாதாரணம்!'' என்கிறார் ராஜகோபால், (அமெச்சூர் நாடகக் குழுக்களின் தோற்றமும் வளர்ச்சியும்' என்று தீஸிஸ் எழுதும் அளவுக்கு ராஜகோபாலிடம் சரக்கு இருக்கிறது!)



கண்பட்ட மாதிரி என்பார்களே, அது போல ஒரு நாள் கொட்டகை தீப்பிடித்து எரிந்தது. மறுபடி கீற்றுக்கொட்டகை போட, அடுத்து வந்த பெரும் புயலில் விழுந்து நொறுங்கியது கொட்டகை!

வேறு யாராவதாக இருந்தால் 'போதும்டா சாமி' என்று போட்டுவிட்டு ஓடியிருப்பார்கள். நாட் ராஜகோபால், ஐம்பது மெம்பர்களிடமிருந்து 15 வருட சந்தா (1500 ரூபாய்!) அட்வான்சாக வாங்கினார். ஆஸ்பெஸ்டாஸ் கொட்டகை போட்டார். ராஜா அண்ணாமலை மன்றத்தில் பழைய நாற்காலிகளை எடுத்துவிட்டுப் புதுசு போட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு, அந்த நாற்காலிகளை அப்படியே வாங்கிக்கொண்டு வந்து மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸில் பொருத்தினார்.

மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸில் ஒரு கருத்து வேறுபாடு காரணமாக, தாமே உருவாக்கிய சபாவை விட்டு வெளியே வந்தார் ராஜகோபால், 1974ல் வெளியேறியபிறகு சிறிது காலம் அமைதியாக இருந்தார்.

"நீங்க இப்படி சும்மா இருக்கக் கூடாது. உங்க அனுபவத்தைப் பயன்படுத்தி வேறு ஒரு சபா தொடங்கணும்.'' என்று ஏராளமான வேண்டுகோள்கள். ராஜகோபாலால் தட்ட முடியவில்லை.

வெறும் ஆர். ராஜகோபாலாக இருந்தவர், 'கார்த்திக்' ராஜகோபாலாக இன்றைக்கு எல்லாரும் சொல்வதற்குப் பிள்ளையார் சுழி போட்ட தினம் ஏப்ரல் 14, 1975. தலைவர் டிடி. வாசு.

எந்த ஆர் ஆர் சபா ஆரம்ப 50களில் நிகழ்ச்சிகள் நடத்த அனுமதி மறுத்ததோ, அதே ஆர்.ஆர் சபா அரங்கம் 'கார்த்திக்' ராஜகோபாலை இரு கரம் நீட்டி வரவேற்றது. ராஜா சர் முத்தையா செட்டியார் தலைமையில், செம்மங்குடி தொடங்கி வைக்க, லால்குடி ஜெயராமன் - ஜிஜெஆர் கிருஷ்ணன் வயலின் கச்சேரியுடன் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் வழியாக ராஜகோபாலின் கலைப்பணி இன்னொரு ரவுண்டு தொடங்கியது. ஆனால் _

ஆகஸ்ட் 75ல் டீவி வந்ததும், வெள்ளிக்கிழமை ஒலியும்-ஒளியும், ஞாயிற்றுக்கிழமை சினிமா என்று, சபாக்களின் பெரிய திரையை தூர்தர்ஷனின் சின்னத்திரை மறைக்க ஆரம்பித்தது. உறுப்பினர்கள்

• 'மனம் ஒரு குரங்கு' - நாடகமேடை

கூட்டம் குறைய ஆரம்பித்தது. நாடகம் இரண்டாம் பட்சமாகப் போயிற்று. நடிகர்களும், நடிகைகளும் டி.வியை நோக்கிப் படை யெடுக்கத் தொடங்கினார்கள்.

"வியாழன் - வெள்ளியில் நாடகங்கள் போட ஆரம்பித்தோம். புதிய நாடகம் என்றால் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸில்தான் தொடங்குவது என்று நாடகக் குழுக்களும் மெள்ள மெள்ள வரத் தொடங்கினார்கள்!" என்று அசை போடுகிறார் ராஜகோபால்.

"89ல் மியூசிக் அகடமி தலைவராக டிடி.வாசு பொறுப்பு ஏற்றுக்கொண்டதும், ஸ்ரீராம் குரூப் ஏவிஎஸ் ராஜாவைத் தலைவராக இருக்கக் கேட்டுக் கொண்டேன்." வாசுவும் ராஜாவும் கொடுத்த ஒத்துழைப்பும், ஆதரவும் இவருக்குப் பெரிய பலம்.

"77லேயே டிசம்பர் இசைவிழாக்களைத் தொடங்கினாலும், 89ல் தான் 'இசைப் பேரொளி' பட்டம் வழங்க ஆரம்பித்தோம். பிறகு சிறந்த இளம் நாட்டியக் கலைஞர்களை ஊக்குவிக்க 'நடனமாமணி', தமிழிசையை வளர்க்க 'தமிழிசை வேந்தர்' பட்டங்கள் கொடுக்க ஆரம்பித்தோம்.

வருடா வருடம் கோடை நாடக விழா மூலம் புதிய புதிய நாடகங்களையும், புது நாடகாசிரியர்களையும் அறிமுகப்படுத்திய 'கார்த்திக்' ராஜகோபால் "வேற வேற ஏரியால இருக்கற புது டேலன்ட்ஸை வெளிக்கொண்டு வர இது மாதிரி செய்தால்தான் முடியும்" என்கிறார். எல்லா பிரபல இசைக் கலைஞர்களையும் ஒரு ஞாயிறு காலையில் ஒன்று திரட்டி, தியாகராஜ ஆராதனையை சபாவில் நடத்த ஆரம்பித்தவர் 'கார்த்திக்' ராஜகோபால்தான்.

"கர்நாடக இசைக்கு கூட்டம் வருகிறது. நல்ல நாடகங்கள் போட்டாலும் ஆதரவு இருக்கிறது. உபந்நியாசங்கள் சில வைத்தாலும் ரசிகர்கள் ஆதரிக்கத்தான் செய்கிறார்கள். மக்களின் பொழுது போக்குக்கும் வசதி செய்து, அதேசமயம் ஓரளவு தரமானதாகவும்தான் நிகழ்ச்சிகளை கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் வழங்குகிறது!" என்கிறார்.

எளிமை, முடிந்த அளவுக்குப் பிறருக்கு உதவுவது, எதையும் தமது சாதனை என்று சொல்லிக் கொள்ளாமல் அமைதியாகப் பணியைச் செய்வது என்று இந்த 78 வயதிலும் சுறுசுறுப்பாக, மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் தொடங்கியபோது இருந்த இளைஞராகவே இருக்கிறார் 'கார்த்திக்' ராஜகோபால்.

- **எஸ்.வி.என்**

படம் : **வெங்கடேஷ்**

# கல்கி



இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

சர்வதேச விண்வெளி நிலையத்தில், ஆராய்ச்சி செய்து வரும் ஜப்பானிய விஞ்ஞானிகள், தங்கள் நாட்டின் கலாசாரத்தைப் போற்றும் விதமாக, பாரம்பரிய தேநீர் தயாரிக்கிறார்களாம். இதுவே, நம்ம ஊர்க்காரங்க, ஸ்பேஸ் ஸ்டேஷன் போனால், பாரம்பரியத்தைப் போற்றும் விதமாக என்ன செய்வார்கள்? ஜாலியா கற்பனை பண்ணி எழுதிப் போடுங்க...தலை சிறந்த இரு கற்பனைகளுக்குத் தலா நான்கு கிராம் தங்கம் பரிசு.

## புன்னகைப் போட்டி - 6

**ஜாலி கற்பனை**

---------------------

---------------------

---------------------

கூப்பன் அனுப்பும் உறையில் **புன்னகைப் போட்டி - 6** என்று குறிப்பிட்டு கல்கி, 47 ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை-94 என்ற முகவரிக்கு அனுப்பவும். கூப்பனைத் தபால் கார்டில் ஒட்டியும் அனுப்பலாம். கடைசி தேதி:1.4.2002. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

"வாழ்க்கையில் ரொம்ப பிரபலமா இருக்கிறவங்களைப் பார்க்கிறப்போ, பல பேருக்கு ஆச்சரியமா இருக்கும்; சில பேருக்கு பொறாமையா இருக்கும். 'பிரபலம்'கிறது ஒரு நாளில் கிடைச்சுடறதில்லை; அதுக்குப் பின்னாலே கடுமையான உழைப்பு இருக்கு; அதிர்ஷ்டம் கூட இரண்டாம் பட்சம்தான்."

இந்த வரிகளைச் சொல்லிவிட்டு, டென்ஷனுடன் காத்திருந்தார் அர்ச்சனா. சன் டீ.வி.யில் வாராவாரம் ஸ்வர்ணமால்யா கலகலக்கிய 'இளமை-புதுமை' நிகழ்ச்சிக்கு, அவர் குட்பை சொன்னதையடுத்து, வந்திருக்கும் புதிய தொகுப்பாளினிதான் அர்ச்சனா. ஸ்வர்ணமால்யா பங்கேற்ற கடைசி எபிஸோடில் அவர் சொன்ன டயலாக் இது. அதையே, ஸ்கிரீன் டெஸ்டின் போது கொடுத்து பேசிக்காட்டச் சொன்னதும், அர்ச்சனா அசத்திவிட, நிகழ்ச்சியின் அடுத்த நங்கூர நங்கை அட, அர்ச்சனா!

எத்திராஜ் கல்லூரியில் கார்ப்பரேட் செகரட்டரிஷிப் கடைசி வருடம் படிக்கிறார். கல்லூரி சார்பில் போட்டிகள் பல வற்றிலும் பங்கேற்று பரிசுகளைக் குவிப்ப தால் மிகச் சிறந்த மாணவி பட்டம் தொற்றிக் கொண்டதாம்.



# அட, அர்ச்சனா!

"நான் பள்ளிக்கூட நாட்களில் ரொம்ப ரிசர்வ்டு டைப். கலகலப்பாகப் பேச மாட்டேன். டி.ஏ.வி. பெண்கள் பள்ளியில், பதினோராம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது, என்னை கல்சுரல் செகரட்டரி ஆக்கிவிட்டார்கள். அதனால் சக மாணவிகளிடம், மற்ற பள்ளி மாணவிகளிடம் என்று நிறைய பேச ஆரம்பித்தேன். இப்போது பேச ஆரம்பித்தால் ஓயமாட்டேன் என்று மற்றவர்கள் சொல்லும் அளவுக்கு நிறைய பேசிக் கொண்டிருக்கிறேன்" என்று சிரித்தார்.

எப்போதும் ஏதாவது கிரியேடிவ் ஆக செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் உடைய இவர், பள்ளிக் கூடப் படிப்பை முடித்தவுடன், பெண்களுக்கான ஓர் இணைய தளத்தில், நிருபராகச் சேர்ந்து கட்டுரைகள் எழுத ஆரம்பித்தாராம். அதன்பின் ஜெயா டீ.வியில் வாய்ப்பு கிடைத்தது. 'தலைப்புப் பாடல்கள்' என்று ஒரு நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். ஒரு குறிப்பிட்ட தலைப்பை எடுத்துக் கொண்டு (உதாரணமாக பரதம்) அது சம்பந்தமான பாடல் காட்சிகளாகத் தொகுத்து வழங்குவது. அப்புறம் சில வாரங்கள் ஜெயாவில் ஆங்கிலச் செய்தி வாசித்திருக்கிறார்.

தொடர்ந்து ராஜ் டீ.வியிலிருந்து அழைப்பு வரவே. 'பாப் பஜார்' என்ற நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். திரை ஜாலம் என்று இன்னொரு புரோகிராம். கேமரா சகிதம் பீச், பஸ் ஸ்டாப், பார்க் என்று சுற்றி, பலரையும் கேள்விகள் கேட்பது, ஜோக்கடிப்பது என்று ஜாலியான நிகழ்ச்சியாம் அது. இப்ப ஜாலியே ஜோலி என்றாகிவிட்டது என்றார்.

அர்ச்சனாவின் அம்மா தமிழ், அப்பா பஞ்சாபி. "நான் மற்றவர்கள் பாராட்டும்படி தமிழ் பேசுகிறேன் என்றால், அதற்குக்

காரணம் பாலு மணிவண்ணன் என்பவர்தான்'' என்று கூறும் அர்ச்சனாவிடம், 'அவர்தான் உங்கள் ஸ்கூல் தமிழ் ஆசிரியரா?' என்று கேட்டால், "இல்லை...இல்லை... ஜெயா டீ.வியில் தலைப்புப் பாடல் நிகழ்ச்சியின் பொறுப்பாளர். மிகுந்த பொறுமையுடன் அவர் தமிழ் சொல்லிக் கொடுத்தது இன்று எனக்கு ரொம்ப உபயோகப்படுகிறது'' என்றார் நன்றிமேலிட....

"டெலிவிஷன் நிகழ்ச்சிகள் தவிர, மேடை நிகழ்ச்சிகளை நடத்திய, தொகுத்து வழங்கிய அனுபவமும் ஏராளம். எம்.ஜி.எம். டிஸி வேர்ல்டில் உள்ள, பனிப் பகுதியில் நடக்கும் நிகழ்ச்சியின் தொகுப்பாளினி நான் தான். அதில் ஒரு நாள் நான் எல்லோருடனும் சேர்ந்து இசைக்கேற்ப நடனமாடிக் கொண்டிருந்தேன். ஒரு பாட்டி தன் இடுப்பில் வைத்துக் கொண்டிருந்த குழந்தையை இறக்கிவிட்டுவிட்டு, என்னிடம் நெருங்கி வந்து, என்னுடன் கைகோத்து நடனமாடியது, என்னால் மறக்கவே முடியாது." மறுபடி ஓர் இளமைச் சிரிப்பு!

அர்ச்சனாவுக்கு ரஜினி, சுசி, விவேக், பிரமோத், விஜய், சந்தோஷ், சஜத் என்று ஸ்நேகிதப் பட்டாளமே உண்டு. மற்றவர்கள் எல்லாம், நிறை, குறைகளை பாசிடிவான கண்ணோட்டத்தில் விமர்சித்தாலும், சஜத் மட்டும், எவ்வளவு நன்றாக நிகழ்ச்சிகளை வழங்கினாலும், கப்புடு கணக்காய் நார் நாராய்க் கிழித்து விடுவாராம்.

அர்ச்சனா பிரதான மாடலாகத் தோன்ற, 'உனக்காக' என்று இசை ஆல்பம் ஒன்று வெளியாகியுள்ளது.

**"இளமை-புதுமை நிகழ்ச்சியின் முக்கியமான அம்சமே, அதில் இடம் பெறும் கடிஜோக்ஸ்தானே! ஏது... உங்கள் கைவசம் ஏராளமான கடிஜோக்ஸ் வைத்திருக்கிறீர்களா?"**

"ஒரு யானை, ஒரு எலியைத் துரத்திக் கொண்டே வந்ததாம். வேகமாக ஓடிவந்த எலி, சட்டென்று அங்கே இருந்த கோவிலுக்குள்ளே போய் ஒளிந்து கொண்டதாம். தேடிக் கொண்டு வந்த யானை, கோவிலுக்கு முன்னால் வந்தவுடன், சட்டென்று எலி, கோவிலுக்குள்ளே தான் போயிருக்கிறது என்று தெரிந்து கொண்டு விட்டதாம். எப்படி?"

"எப்படி? நீங்களே சொல்லிடுங்க."

"ம்...யானை எப்படி கண்டு பிடிச்சது தெரியுமா? கோவிலுக்கு வெளியில, இருந்த எலியோட செருப்பை வைச்சுத்தான்!"

தாயே! நற்றமிழ் டீவியே! உன்னை நீயே காப்பாத்திக்கோம்மா.

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி




**சாவை அழைத்துக் கொண்டு வருபவள் - தளவாய் சுந்தரம்**

பல்வேறு பத்திரிகைகளில் வெளியான பத்து சிறுகதைகளின் தொகுப்பு. இயல்பான நடையில் செல்லும் கதைகளில் பெரும்பாலானவை மரணத்தையும் பிரிவையும் பற்றியே பேசுகின்றன.

அகரம், ப்ளாட் எண் 1, நிர்மலா நகர், தஞ்சாவூர் - 613 007. விலை ரூ.50.




**தம்மபதம் : ஓஷோ**

புத்தரின் கொள்கைகள் பற்றிய ஓஷோவின் சொற்பொழிவுகள் இப்புத்தகம். வாசிப்பில் ஒவ்வொரு இடமும் ஏதோ ஓர் இன்பத்தைத் தருகிறது. பேராசிரியர் என். ரமணியின் மொழி பெயர்ப்பு அருமை.

கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.120




**மனம் மனமறிய ஆவல், பற, -அருண்சரண்யா**

இரண்டுமே கல்கியில் தொடராக வெளிவந்து வாசகப் பாராட்டுகளைப் பெற்ற நாவல்கள், ஆசிரியர் அருண் சரண்யாவின் கட்டுக்கோப்பான வார்த்தைகளும், நடையும் மெருகேற்றுகின்றன இந்த நாவல்களுக்கு.

திருவரசு புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை பற-ரூ.32, மனம் மனமறிய ஆவல் ரூ.35/-




**தமிழ் இலக்கிய கதைகள் - நா. பார்த்தசாரதி**

தமிழிலக்கிய கதைகள் எடுக்க எடுக்க இனிப்பானவை. அகம், புறம் தவிர, தனிப் பாடல் திரட்டு பாடல்களும் சுவை மிக்கவை. அதிலிருந்து எடுக்கப்பட்ட கதைகளே இப்புத்தகம்.

தமிழ்ப் புத்தகாலயம், ஜி3/8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.55)

புக் பேங்க்!

தம்பி

# Max Power

***Energy Efficient Wall Mounted Stabilizer***



**Efficiency 97%**
**Guarantee: 6 Years**

**Price:**
**Suitable for 2 Ton AC Rs.2250/-**
**Suitable for 1.5 Ton AC Rs.2050/-**
**Suitable for 1 Ton AC Rs.1950/-**
**Extra for Double Boost Rs.700/-**

***Also available:***

- **Automatic Phase Changer**
- **Inverter for Home Lighting**
- **L.T. Current Transformers**
- **Micro-Processor Based P.R. Relay**
- **SCR Controlled Battery Charger for Gen-Set Battery**

Marketed By:

## Aruna Agencies

5, Nesavalar Street, Triplicane, Chennai - 5.

**Ph: 8555612, 8551026**

# காதல்!

**கா**தல்...
தேசாந்திரங்களைத் தாண்டி,
ஓசையின்றி இசைக்கப்படும்
சங்கீதம்...

யாழின் நரம்புகளில்
தெரித்துக் கிளம்பும்
ஆன்மாவின்
சுரங்கள்...

வெளிகளில்
வேர்கள் படர,
உள்ளுக்குள் பூக்கும்
ரோஜாக்கள்...

புவியை
எடையற்றதாக்கி
உருட்டி விளையாடும்
உணர்வு மட்டைகள்...

திக்குகளைப் பிடுங்கி
திசை மாற்றி
நடுகின்ற
நெம்பு கோல்கள்...

காற்றினைச் செதுக்கி
சிற்பங்களை
வடிக்கும்
தங்க உளிகள்...

ஓசையுடன் ஒளியை
உரையாட வைக்கும்
லிபியற்ற
மொழிகள்...

தரை தட்டுவதற்காய்
கரை
தேடி வந்த
கலங்கள்...

புவி ஈர்ப்பு விதிக்குப்
புதிதாய்
விதி செய்த
மனித ஈர்ப்புகள்...

அன்பு மட்டுமே
சுவாசிக்கப்படும்,
அந்தப்புர
யாக சாலைகள்...

பொய்யினை
நிர்வாணப்படுத்திய
காலத்தின்
நிஜங்கள்...

காதல்...
தேசாந்திரங்களைத் தாண்டி,
ஓசையின்றி இசைக்கப்படும்
சங்கீதம்...

பா.க.சு. மணியன்



# ஓர் விண்ணப்பம்

ஐயா,

எனது மகன் திரு. S. ராஜகுமார், வயது 26, மிகவும் அரிதான மற்றும் கடுமையான 'ஏப்ளாஸ்டிக் அனீமியா' (Aplastic Anaemia) எனப்படும் உயிர்கொல்லி நோயினால் (CMC Hospital No.127611C) மிகவும் அவதிப்படுகின்றார். இதற்கு "ஆன்ட்டி லிம்போசைட் க்ளோபுளின்" (Anti Lymphocyte Globulin) என்கிற மருத்துவ சிகிச்சையானது வேலூர் CMC ஆஸ்பத்திரியில் மட்டும் ஹேமடாலஜி பிரிவில் (Haematology Department) டாக்டர் அலோக் ஸ்ரீவத்ஸவா அவர்களால் செய்யப்படுகிறது. இந்த சிகிச்சைக்கான கட்டணம் மட்டும் ரூ.5 லட்சம் (Rs. 5 lakhs) ஆகிறது. இது மாதிரி சிகிச்சைகள் இந்தியாவிலேயே மூன்று நான்கு இடங்களில் மட்டும் செய்யப்படுகிறது.

மிகவும் கீழ்மட்ட நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்தவனாகிய என்னால் இவ்வளவு பெரிய தொகையை சேர்க்க முடியாது. நான் காதுகேளாத, பேசாத குழந்தைகளுக்காகவும், மூளை வளர்ச்சி குறைந்த குழந்தைகளுக்காகவும் (Deaf & Mentally Retarded) ஒரு சிறிய பள்ளியை நடத்திக் கொண்டு வருகிறேன். அதன் மூலமாக கிடைக்கும் சொற்ப வருமானத்தால் மேற்படி சிகிச்சைக்கான செலவில் 2% சதவீதம் கூட சரிகட்ட முடியாது. எனது ஒரே மகன் திரு. ராஜகுமார் மூளைவளர்ச்சி குறைந்த குழந்தைகளுக்கு போதனை செய்யக் கூடிய டிப்ளமா (Special educator - M.R.) படித்தவர்.

இந்த நிலையில் நல்ல உள்ளமும், உதவிகளையும் செய்யக்கூடிய தங்களைப் போன்றவர்களை நாடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஆகவே ஐயா அவர்கள் தயைகூர்ந்து தங்களால் இயன்ற அளவு நிதி உதவிகளை செய்து மருத்துவச் செலவுகளை மேற்கொண்டு ஓர் உயிரினை காப்பாற்ற உதவி செய்ய வேண்டுமாய் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். தங்களின் மேலான உதவிகளை என்றென்றும் நன்றியுடன் நினைவில் வைத்திருப்போம். தங்களின் உதவிகளை வங்கி காசோலை/டிராப்ட் மூலமாகவும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பி என் மகன் உயிரைக் காப்பாற்ற வேண்டுகிறேன்.

இப்படிக்கு,
N.SUBHARAJ

S. ராஜகுமார், (C.M.C. Hospital No.127611C) SB A/C No.P6727,
சென்டரல் பேங்க் ஆப் இந்தியா, C.M.C. Hospital, வேலூர் - 4

***தங்களின் மேலான உதவிக்கு இதயபூர்வமான நன்றியினை தெரிவித்து கொள்கிறேன்.***



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356; 475 5799
Email: svhome1rediffmail.com

# சிவகாமியின் சபதம்

## பதினாறாம் அத்தியாயம்

## முற்றுகைக்கு ஆயத்தம்

கண்ணபிரானும் கமலியும் வாக்குவாதம் செய்துகொண்டிருந்த அதே சமயத்தில் அரண்மனை அந்தப்புரத்தின் முன் வாசல் மண்டபத்தில் அமர்ந்து, மகேந்திர பல்லவரின் பட்ட மஹிஷியான புவன மகாதேவியும், மாமல்ல நரசிம்மரும் தளபதி பரஞ்சோதியும் வார்த்தையாடிக் கொண்டிருந்தார்கள்.

"தேவி! சென்ற எட்டு மாதங்களாக இந்தக் கோட்டைக்குள்ளே அடை பட்டுக் கிடக்க நேர்ந்ததன் பொருட்டுக் குமார சக்கரவர்த்தி ஓயாமல் குறைப் பட்டுக் கொண்டிருக்கிறாரே? அவர் குறைப்படுவதற்குக் காரணம் ஒன்றுமே இல்லை. கோட்டை மதில், நகரம் எல்லாவற்றையும் நான் நன்றாய்ச் சுற்றிப் பார்த்தாகி விட்டது. இந்தக் காஞ்சிக் கோட்டையை ஏறக்குறையப் புதிய கோட்டையாகவே செய்துவிட்டிருக்கிறார். தேவேந்திரனும் விருத்திராசுரனும் சேர்ந்து படையெடுத்து வந்தாலுங்கூடக் காஞ்சிக்கோட்டைக்குள்ளே புக முடியாது; வாதாபி புலிகேசியும் தலைக்காட்டுத் துர்விநீதனும் என்ன செய்துவிடப் போகிறார்கள்!" என்று தளபதி பரஞ்சோதி கூறினார்.

"கோட்டையை அவ்வளவு பலப்படுத்த மாமல்லன் என்னென்ன காரியங்கள் செய்திருக்கிறான்? நீதான் எனக்குச் சொல்ல வேண்டும், பரஞ்சோதி! மாமல்லன் எனக்கு ஒன்றுமே சொல்வதில்லை. அந்தப்புரத்திற்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டிய

அமரர் கல்கி

அபலை ஸ்திரீக்கு யுத்த விஷயங்கள் என்ன தெரியப் போகிறது என்று அவனுக்கு எண்ணம்!" என்றாள் மகேந்திர பல்லவரின் பட்டமஹிஷி.

"அம்மா! அந்தப்புரத்தில் அடைபட்டுக்கிடக்கும் அபலை ஸ்திரீ உண்மையில் தாங்களா? நானல்லவா பெண்ணிலும் கேடானவனாகக் கோட்டைக்குள்ளேயே அடைபட்டுக் கிடக்கிறேன்! மகேந்திர பல்லவர் இப்படி என்னை வஞ்சிப்பார் என்று நான் நினைக்கவில்லை!" என்று கூறி மாமல்லர் கைகளைப் பிசைந்துகொண்டார்.

"குழந்தாய்! உன் தந்தையைப் பற்றி எதுவும் சொல்லாதே! அவர் என்ன சொன்னாலும், என்ன செய்தாலும் அது முன் யோசனையுடனும் தீர்க்க திருஷ்டியுடனும் இருக்கும்..."

என்று புவன மகாதேவி கூறுவதற்குள் பரஞ்சோதி, "உண்மை, தேவி உண்மை! மகேந்திர சக்கரவர்த்தியைப் போல் மதிநுட்பமும் முன்யோசனையும் உள்ளவர்கள் ஈரேழு பதினாலு உலகத்திலும் காண முடியாது என்று நான் சத்தியம் செய்வேன்!" என்றார்.

"ஒருவருக்கு இரண்டு பேராய்ச் சேர்ந்து கொண்டீர்கள் அல்லவா? அப்படியென்றால் நானும் உங்களோடு சேர்ந்து கொள்ளுகிறேன். மகேந்திர பல்லவர் ரொம்பவும் முன்யோசனையுடன் காரியங்களைச் செய்கிறவர்தான்; சந்தேகமில்லை. ஆனால், அவருடைய தந்தை சிம்மவிஷ்ணு மகாராஜா இன்னும் அதிக முன்யோசனை உள்ளவர். ஆகையினால்தான் அவர் துர்விநீதனுடைய தந்தைக்குப் பட்டங் கட்டி வைத்தார். அவரே நேரில் கங்கதேசம் சென்று தம் கையினாலேயே மகுடம் சூட்டினார்! அந்தக் காரியத்துக்கு எவ்வளவு நன்றாய் இப்போது துர்விநீதன் நன்றி செலுத்துகிறான் பாருங்கள்! சிங்கமும் சிங்கமும் சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போது நடுவில் நரி நுழைவதுபோல், புலிகேசி படையெடுத்திருக்கும் சமயம் பார்த்துத் துர்விநீதனும், பல்லவ ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறான்! அவசர அவசரமாக எங்கும் இராத் தங்காமல் துர்விநீதன் தன் சைனியத்துடன் வந்து



கொண்டிருக்கிறான்? இது தெரிந்தும், நான் இந்தக் கோட்டைக்குள்ளே அடைந்து கிடக்க வேண்டியிருக்கிறது! நீங்கள் சக்கரவர்த்தியின் மதி நுட்பத்தையும் தீர்க்காலோசனையையும் பற்றிப் பேசுகிறபோது, எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரிகிறது!'' என்று மாமல்லர் கூறுகையில், அவருடைய கண்கள் நெருப்புத் தணலைப்போல் சிவந்து தீப்பொறியைக் கக்கின.

''குழந்தாய்! வீணாக நொந்து கொள்ளாதே! கங்கபாடி அரசனின் நன்றியற்ற துரோகச் செயலை நினைத்தால் எனக்கும் கோபமாய்த் தானிருக்கிறது! அதற்காக என்ன செய்யலாம்? எதற்கும் காலம் வர வேண்டுமல்லவா?'' என்றாள் புவன மகாதேவி.

''தேவி! துர்விநீதனுக்குத் தக்க தண்டனை கொடுக்க இதற்குள்ளாகவே சக்கரவர்த்தி திட்டம் போட்டிருப்பார்; சந்தேகமில்லை'' என்றார் தளபதி பரஞ்சோதி.

''சக்கரவர்த்தி திட்டம் போட்டிருப்பார்; அதை நிறைவேற்றவும் செய்வார். ஆனால் நான் ஒருவன் எதற்காக யுவ மகாராஜா, குமார சக்கரவர்த்தி, மாமல்லன் முதலிய பட்டங்களைச் சுமந்து கொண்டிருக்கிறேன்? அம்மா! பாரதக் கதையில் வரும் உத்தரகுமாரனைவிடக் கேடானவன் ஒருவன் உண்டு என்றால், அவன் நான்தான். உத்தர குமாரனாவது போர்க்களத்துக்குப் போய்விட்டுத் திரும்பி ஓடி வந்தான். நானோ அரண்மனையை விட்டு வெளிக் கிளம்பவே இல்லை. மகாபாரதக் கதையை எழுதியதுபோல் இந்தக் காலத்துக் கதையை யாராவது எழுதினால், என்னுடைய வீரத்தையும் தீரத்தையும் எவ்வளவு பாராட்டுவார்கள்? ஆனாலும் நான் சாந்தமாக இருக்க வேண்டுமென்று நீங்கள் இருவரும் சேர்ந்து உபதேசிக்கிறீர்கள்!'' என்று கூறியபோது, வீரமாமல்லரின் கண்களில் நீர் ததும்பி நின்றது.

அவருடைய முகத்தை நேருக்கு நேர் பார்க்க முடியாதவராயிருந்த பரஞ்சோதி சக்கரவர்த்தினியை நோக்கி, "தேவி! பல்லவ குமாரர் தம்மை உத்தர குமாரனுடன் ஒப்பிட்டுக் கொள்வது கொஞ்சமும் பொருத்தமாயில்லை. மற்ற எல்லாரும் போருக்குப் போனபோது உத்தர குமாரன் என்ன செய்து கொண்டிருந்தான்? தன்னுடைய தங்கை உத்தரகுமாரி நாட்டியம் கற்றுக் கொள்வதைப் பார்த்துக்கொண்டு காலங் கழித்தான். மாமல்லர் அப்படிக் காலங் கழிக்கவில்லையே!'' என்றார். இவ்விதம் அவர் சொல்லி வருகையில் மூன்று பேருக்கும் சிவகாமியின் நாட்டியக் கலை விஷயம் ஞாபகம் வந்தது. மாமல்லரின் முகம் சுருங்கியது.

பரஞ்சோதி தாம் நடனக் கலையைப் பற்றிப் பிரஸ்தாபித்தது உசிதத் தவறு என்பதை உணர்ந்துகொண்டு, "மேலும், யுத்தம் இன்னும் ஆரம்பமாகக்கூட இல்லையே? மகாபாரத யுத்தத்தைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரிய யுத்தம் இனிமேல்தானே நடக்க இருக்கிறது? மாமல்லர் வீரச் செயல்கள் புரிவதற்கு இனிமேல் தானே சந்தர்ப்பங்கள் வரப்போகின்றன?'' என்றார்.

''போதும், போதும்! எத்தனை யுத்தம் நடந்தால்தான் என்ன? எப்பேர்ப்பட்ட சந்தர்ப்பம் வந்தால்தான் என்ன? அப்பா என்னை இந்தக் கோட்டைக்குள்ளேயே பூட்டி வைக்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்?'' என்று மாமல்லர் கொதிப்புடன் கேட்டார்.

புதல்வனின் மனநிலையைக் கண்ட அன்னை பேச்சை மாற்ற விரும்பி, "பரஞ்சோதி! கோட்டையைப் பத்திரப் படுத்துவதற்கு மாமல்லன் செய்திருக்கும் காரியங்களைப் பற்றி நீ ஒன்றும்

சொல்லவில்லையே?" என்றாள்.

"தேவி! நமது கோட்டை மதிலைச் சுற்றியுள்ள அகழியைத் தாங்கள் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா?"

"ஆமாம்; எட்டு மாதங்களுக்கு



முன்னால் பார்த்திருக்கிறேன். சக்கரவர்த்தி புறப்பட்டுச் சென்ற பிறகு நான் அரண்மனையை விட்டு வெளிக் கிளம்பவே இல்லை.''

''நானும் எட்டு மாதங்களுக்கு முன்பு பார்த்ததுதான். முன்னே பார்த்தபோது சிறு கால்வாய் மாதிரி இருந்தது. இப்போது பார்த்தால் சமுத்திரம் மாதிரி அலைமோதிக் கொண்டிருக்கிறது. எங்கே பார்த்தாலும் முதலைகள் வாயைப் பிளந்து கொண்டு காணப்படுகின்றன. வாதாபிச் சைனியத்தில் எத்தனை பேருக்கு இந்த அகழியில் மோட்சம் கிடைக்கப் போகிறதோ!'' என்றார் பரஞ்சோதி

''அகழியில் அவர்கள் இறங்கினால் தானே? பாலங்கள் அமைத்துக் கொண்டு வந்தால்? அல்லது படகிலே வந்தால்?''

''தேவி! அகழியின் அருகில் வருகிறவர்கள் மீது அம்புகளைப் பொழிய ஐயாயிரம் வில் வீரர்கள் மதில் சுவர்கள் மீது மறைந்து காத்திருப்பார்கள்! அப்படியும் அகழியைத் தாண்டி வருகிறவர்களுக்கு மதில் சுவருக்கும் அகழிக்கும் மத்தியில் எத்தனையோ அதிசயங்கள் காத்துக்கொண்டிருக்கும். வெளிக்குத் தெரியாத, பள்ளங்களில் அவர்கள் விழுந்து காலை ஒடித்துக் கொள்வார்கள். ஆங்காங்கே கண்ணுக்குத் தெரியாதபடி விரித்திருக்கும் வலைகளிலும் பொறிகளிலும் சிக்கிக் கொள்வார்கள். இவற்றையெல்லாம் மீறி வந்து மதில் சுவர் மேல் ஏற முயலும் சளுக்க வீரர் தலைகளின் மீது மதில்சுவரின் மேல் வைத்திருக்கும் பாறாங்கற்கள் உருண்டு விழும்!''

''வாதாபி சைனியம் கடலைப் போல் பெரியதென்று சொல்கிறார்களே, பரஞ்சோதி! லட்சக்கணக்கான வீரர்கள் மனம் வைத்தால் அகழியை ஆங்காங்கே தூர்த்து வழி ஏற்படுத்திக் கொள்ளலாமல்லவா!''

''ஆமாம் தேவி! அகழியைத் தூர்க்கலாம்; ஆனால் கோட்டை மதிலை அவ்வளவு சுலபமாக இடிக்க முடியாது!''

''கோட்டை வாசலுக்கு எதிரே அகழியைத் தூர்த்துக்கொண்டு யானைகளை ஏவினால் என்ன செய்கிறது? மத்த கஜங்களின் தாக்குதலுக்கு எதிரே கோட்டையின் மரக்கதவுகள் என்ன செய்யும்?'' என்று பட்டமகிஷி கேட்டபோது, பரஞ்சோதி எதையோ நினைத்துக்கொண்டவர்போல் சிரித்தார்.

''அப்பா! ஏன் சிரிக்கிறாய்?'' என்றாள் சக்கரவர்த்தினி.

''தாங்கள் கேட்டதை நினைத்துத்தான் சிரிக்கிறேன். உண்மைதான் தேவி! வாதாபி வீரர்கள் அப்படித்தான் செய்யப் போகிறார்கள். நமது கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழியைத் தூர்க்கப் போகிறார்கள். அல்லது பெரிய பெரிய மரங்களை வெட்டிக் கொண்டு வந்து பாலம் போடப் போகிறார்கள். போட்டுவிட்டுக் கோட்டைக் கதவுகளைத் தகர்க்க யானைகளை ஏவப் போகிறார்கள். அந்த யானைகளுக்கு முதலில் மதுவைக் கொடுத்துவிட்டுத்தான் ஏவப் போகிறார்கள்! ஆனால்! ஆகா! அந்த யானைகள் எப்பேர்ப்பட்ட அதிசயத்தை அநுபவிக்கப் போகின்றன? கோட்டை வாசலின் மேல் மண்டபத்திலிருந்தும் பக்கத்து மதில் சுவர்களின் மேலிருந்தும் வஜ்ராயுதம் விழுவதுபோல் வேல்கள் வந்து அவற்றின் தலைமீது விழும் போது, அந்த மதுவுண்ட யானைகள் பயங்கரமாய்ப் பிளிறிக்கொண்டு திரும்பி ஓடி வாதாபி வீரர்களைத் துவைத்து நாசமாக்கப் போகிற காட்சியை நினைத்துப் பார்க்கையில் எனக்குச் சிரிப்பு வருகிறது! இது மட்டுமா? மேலேயிருந்து விழுகிற வேல்களுக்குத் தப்பிச் சிற்சில யானைகள் வந்து கதவிலே மோதக் கூடுமல்லவா? அதனால் கோட்டைக் கதவு பிளக்கும்போது அந்த யானைகளுக்கு மகத்தான அதிசயம் காத்திருக்கும் தேவி! வெளிக் கதவு பிளந்ததும், உள்ளே நீட்டிக்

கொண்டிருக்கும் வேல் முனைகள் அவற்றின் மண்டையைப் பிளக்கும் போது ஆகா, அந்த யானைகள் வந்த வேகத்தைக் காட்டிலும் திரும்பி ஓடும் வேகம் அதிகமாயிராதா?" என்றார் பரஞ்சோதி.

"அப்படியா?" என்று மாமல்லரின் அன்னை அதிசயத்துடன் கேட்டாள்.

இதுவரையில் மௌனமாயிருந்த மாமல்லர் அப்போது சம்பாஷணையில் சேர்ந்து, "ஆம் அம்மா! ஆனால், இந்த ஏற்பாடுகளுக்கெல்லாம் மூல காரணம் யார் தெரியுமா? நமது தளபதி பரஞ்சோதிதான்! இவர் முதன்முதலில் காஞ்சியில் புகுந்த அன்று மத யானையின் மேல் வேல் எறிய, யானை திரும்பி ஓடிற்றல்லவா? அதற்கு மறுநாளே இந்தக் காஞ்சிமா நகரிலுள்ள கொல்லர்கள் எல்லோரும் வேல் முனைகள் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்! தளபதி அன்று செய்த காரியத்தினாலேதான், வாதாபியின் யானைப்படையை எதிர்ப்பதற்குத் தக்க யோசனை அப்பாவின் மனத்தில் உதயமாயிற்றாம். இதையெல்லாம் அப்பாவே என்னிடம் சொன்னார்!" என்று மாமல்லர் பெருமையுடன் கூறிப் பரஞ்சோதியை அன்புடன் தழுவிக் கொண்டார்.

"தேவி! இந்த எட்டு மாதத்தில் காஞ்சி நகர்க் கொல்லர்கள் செய்திருக்கும் வேலையை நேற்று நான் பார்த்தேன். லட்சோப லட்சம் வேல்களைச் செய்து குவித்திருக்கிறார்கள். காஞ்சி நகர்க் கொல்லர்கள் வெகு கெட்டிக்காரர்கள், அம்மா! நான் கொண்டு வந்திருந்த சோழநாட்டு வேலைப் போலவே அவ்வளவும் செய்திருக்கிறார்கள். என்னையே அவர்கள் ஏமாறச் செய்துவிட்டார்கள். வடநாட்டுக்கு நான் யாத்திரை சென்றபோது என்னிடம் கொடுக்கப்பட்ட வேல் என்னுடைய சொந்த வேல்தான் என்று எண்ணி நான் ஏமாந்து போனேன். இங்கே திரும்பி வந்ததும்தான் என்னுடைய வேலை மாமல்லர் பத்திரமாய் வைத்திருந்தார் என்று தெரிந்தது. எட்டு மாதமும் வீணில் கழித்ததாக மாமல்லர் எண்ணுவது பெரும் பிசகு. அம்மா! கோட்டை மதில் பாதுகாப்புக் காரியம் மட்டுமல்ல; கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தமாக இன்னும் எவ்வளவோ செய்திருக்கிறார். காஞ்சி மக்களுக்கு இரண்டு வருஷத்துக்குத் தேவையான தானியங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. நகருக்குள்ளிருந்த அநாவசியமான மக்கள் எத்தனையோ பேரை வெளியேற்றியாகிவிட்டது. முக்கியமாகக் காஞ்சி நகருக்கே அவலட்சணமாயிருந்த காபாலிகர்களை வெளியேற்றியது பெரிய காரியம். அதற்குக் குமார சக்கரவர்த்தி வெகு நல்ல யுத்தியைக் கையாண்டார். தேவி! காஞ்சியிலுள்ள மதுபானக் கடைகளையெல்லாம் மூடிவிட வேண்டும் என்று நேற்றைய தினம் கட்டளை போட்டார். இன்றைக்கு அவ்வளவு காபாலிகர்களும் கையில் மண்டை ஓட்டையும் மாட்டுக் கொம்பையும் எடுத்துக் கொண்டு வடக்குக் கோட்டை வாசல் வழியாகப் போய்விட்டார்கள்...!"

இப்படிப் பரஞ்சோதி சொல்லிக் கொண்டே வருகையில் அந்தப்புரத்துச் சேடி ஒருத்தி, அரண்மனை முன் கட்டிலிருந்து உள்ளே வந்து புவன மகாதேவியின் அருகில் நின்று மெதுவான குரலில் ஏதோ கூறினாள்.

அதைக் கேட்ட தேவி முகத்தில் கிளர்ச்சியுடன், "மாமல்லா! அப்பாவிடமிருந்து செய்தியுடன் சத்ருக்னன் வந்திருக்கிறானாம்!" என்று சொன்னாள்.

மாமல்லர் பரபரப்புடன் எழுந்து போக முயற்சி செய்தபோது "குழந்தாய்! சத்ருக்னன் இங்கேயே வரட்டும். செய்தி என்னவென்று நானும் தெரிந்து கொள்கிறேன்" என்றாள் அன்னை.

(தொடரும்)

# சிரிக்கிறாங்கப்பா!



''மேடைப் பேச்சுக் கலையை நீங்க எப்படி கற்றுக்கிட்டீங்க?''

''ஸ்டேஜ் பை ஸ்டேஜாதான்''

*- சச்சின் சக்திவேல்*

---

''பயில்வான் பக்கம் போக ஏன் எல்லோரும் பயப்படறாங்க?''

''தூக்கி எறிந்து பேசுவாராம்!''

*- எஸ்.மோகன்*

''நாட்டுலே வன்முறை எந்த அளவுக்குப் பெருகிப் போச்சு பாருங்க..?''

''என்ன விஷயம்?''

''ஆறு வயசுப் பையன், 'சிலேட்டுலே எழுத, ஜெலட்டின் குச்சி வாங்கிட்டு வாங்க'ன்னு சொல்றானே!''

*- சீர்காழி வி. ரேவதி*



''மகனோட பெயரை மாத்துங்க; இல்லே இனிஷியலையாவது மாத்துங்க. இல்லேன்னா அமெரிக்காவுக்கு விசா தரமாட்டோம்னு சொல்லிட்டாங்க...''

''அப்படியா, உங்க மகன் பேரு என்ன?''

''ஓ. சாமா!''

- மங்கை

---

''செய்கூலி இல்லை, சேதாரம் இல்லை, கல்கிரயம் இல்லைனு நகை வாங்கினது தப்பா போச்சு!''

''என்னாச்சு?''

''பேங்க்ல அடகு வைக்கப் போனப்ப இது தங்கமே இல்லைனு சொல்லிட்டாங்க''

- கோவில்பட்டி வீ.கணேசன்

---

''பயங்கரவாதம் எந்த உருவத்துலே வந்தாலும் எதிர்க்கணுங்க..''

''சரி... அதுக்காக என் அம்மாவை எதிர்த்து தினமும் நீ சண்டை போடுறது சரியில்லை...''

- தஞ்சை தாமு




கேபிள் டீ.வியைப் பற்றி எஸ்.வி. சேகர் சொன்ன ஜோக்கை நீங்களும் சீரியஸாக எடுத்துக் கொண்டு 10.2.2002 இதழில் வெளியிட்டிருந்தீர்கள்.

நாங்கள் கடந்த ஒன்பது வருடங்களாக கேபிள் டீ.வி தொழிலை நடத்தி வருகிறோம். முதலில் ஆரம்பித்தபோது கேபிளில் படம் போடுவது, ஸ்டார் டீ.வி நிகழ்ச்சிகள் என்று ஐந்து சேனல்கள் மட்டும் நடத்தி வந்தோம். அப்போது நாங்கள் வாங்கிய கட்டணம் நூறு ரூபாய். விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக பதினெட்டு சேனல்களாக ஆன போதும் நாங்கள் வாங்கிய கட்டணம் நூறு ரூபாய். பிறகு நாற்பத்தைந்து சேனல்களைக் கொடுக்க வேண்டிய நிலை வந்தது. மேலும் பதினைந்துக்கு மேற்பட்ட கட்டண சேனல்கள் மற்றும் தமிழக அரசின் கேபிள் டீ.வி. வரி ரூபாய் இருபது என எங்கள் சுமை கூடியது. நாங்கள் வாங்குவது நூற்றைம்பது ரூபாய். இப்போது அதில் கட்டண சேனல்களுக்கு

# சூப்பர் கொள்ளை சினிமாவில்தான்!

மட்டும் மாதந்தோறும் நூற்றுநான்கு ரூபாய் கட்ட வேண்டும். (ஒரு சில ஆட்கள் ரூபாய் இருநூற்று ஐம்பது வரை வசூலிக்கிறார்கள்) எங்கள் முதலீடுகள் அனைத்தும் தெருக்களில், கேபிள்களாகவும், பூஸ்டர், கம்பங்களாகவும் போடப்பட்டுள்ளன. இயற்கையின் சீற்றங்களால் பராமரிக்கும் செலவும் அதிகம். லோக்கல் தாதாக்கள் மற்றும் அரசியல் வாதிகளுக்கு இலவச கேபிள் இணைப்பு தரவேண்டியுள்ளது. சராசரியாக ஓர் ஆப்பரேட்டர் 200 இணைப்புகள் வைத்திருந்தால் அதில் 150 வீடுகளில்தான் மாத சந்தா கிடைக்கும். இந்தக் கேபிள் தொழிலை, படித்து வேலையில்லாத இளைஞர்களே செய்கிறார்கள். இந்தத் தொழிலை நம்பி பல லட்சம் குடும்பங்கள் வாழ்கின்றன. எங்களுக்கு அரசாங்கம் இலவச மின்சாரம் கொடுப்பதில்லை. சினிமா தியேட்டர்களின் மின்சார கட்டணத்தை விட அதிக கட்டணத்தைக் கட்டுகிறோம்.

கேபிள் டீ.விக்குப் போட்ட முதலீடுகள் வட்டி, கேபிள் பராமரிப்பு செலவு, தொழிலாளர்களுக்குச் சம்பளம், கட்டண சேனல்கள் கட்டணம் போக மிகவும் சொற்ப லாபம்தான் கிடைக்கிறது. நாங்கள் கொள்ளையடிப்பது இல்லை. சூப்பர் கொள்ளை சினிமா தொழிலில்தான் நடக்கிறது. ஒரு படம் எடுக்க பத்து கோடி என்று இருந்தால் அந்த பத்து கோடி ரூபாய் தமிழகம் முழுவதும் உள்ள தியேட்டர்களில் வசூலிக்கப்பட்டு ஒரே வாரத்தில் கிடைத்து விடுகின்றது. ஒரு படம் முப்பது நாட்கள் மட்டுமே ஓடினால் கூட லாபம் இருபது கோடி! ஆகவே தமிழக அரசு சினிமா தொழிலை அரசு உடமையாக்கலாம். நடிகர்களுக்கும் மற்ற தொழிலாளர்களுக்கும் ஒரு கணிசமான சம்பளத்தைக் கொடுத்து, சினிமாத் தொழிலை அரசாங்கமே நடத்தினால் ஒரு வருடத்துக்கு 2000 கோடி ரூபாய்க்குமேல் வருமானம் கிடைக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். அரசு ஆலோசிக்குமா?

**செங்கை, எம்.ஜி.ஆர். நகர கேபிள் டீ.வி. நலச் சங்கம்**

அடுத்த இதழுடன்...

**பார்வை, உங்கள் பாக்கியம்!**

**கல்கி** — திருப்பூர் திருமூர்த்தி நேத்ராலயா இணைந்து வழங்கும் சிறப்புப் பகுதி

மதிய உணவு இடைவேளை முடிந்து பிற்பகலில் முதல் பாடவேளை தொடங்க சில மணித்துளிகளே எஞ்சியிருந்தன. ஒன்பதாம் வகுப்பில் மாணவர்களின் எண்ணிக்கை நாற்பது. ஆனால் அருகருகே இருந்த பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பு மாணவர்களும் அங்கே குழுமியதில் இடநெருக்கடி. புழுக்கம். இருந்தும் "ஆனந்த ராகம்...கேட்கும் காலம்ம்ம்..." என்று மேஜையையே தபேலா வாத்தியமாக்கி தாளமிசைத்துப் பாடிக் கொண்டிருந்த குணசேகரின் பாட்டு எல்லோரையும் குளிர்ச்சியாய்த் தாலாட்டிக் கொண்டிருந்தது.

திடீரென அங்கே தமிழாசிரியை வந்து சேர, சிதறியோடியது மாணவர் கூட்டம்.

"பாட்டுப் பாடி கூட்டம் கூட்டின அந்த ஹீரோ யாரு?" ஆசிரியைக்கு மூன்றாவது கண் தோன்றாதது மட்டும்தான் பாக்கி. பதற்றப்படாமல் குணசேகரன் எழுந்து நின்றான்.

"எங்கே இப்போ பாடு! பார்க்கலாம்?"

பையன் பயந்து போய், திக்கித் திணறி மௌனம் காப்பான் என எதிர்பார்த்தார் ஆசிரியை. ஆனால் நடந்தது வேறு. நிதானமாக, பாவத்தோடு அவன் பாடத் தொடங்கினான்.

"பெத்து எடுத்தவதான் என்னையும் தத்துக் கொடுத்துப்புட்டா" பாடி முடித்ததும், தம்மையும் அறியாமல் மாணவர்களோடு சேர்ந்து கரவொலி எழுப்பினார் தமிழாசிரியர். இன்று குணசேகரன் ஒரு பிரபல சினிமா இசையமைப்பாளர்.

உங்களுக்கும் தெரிந்திருக்குமே. 'சும்மா... சும்மா...' மெட்டு போட்ட பரணிதான் அவர்.



தஞ்சை மாவட்டம் அருந்தவபுரம் கிராமம்தான் அவர் பிறந்து, வளர்ந்து, படித்ததெல்லாம். குணசேரகன் என்ற பெயரை பரணி என்று மாற்றி வைத்துக் கொண்டாலும், பழசை மறக்கவில்லையாம் பரணி.

"எங்களூர் பள்ளியில் எதிர்வரும் ஏப்ரல்மாதம் நடைபெறவிருக்கும் ஆண்டு விழாவில் என்னைச் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொள்ள அழைத்திருக்கிறார்கள். ரொம்ப த்ரில்ப்ளஸ் பெருமையாக இருக்கிறது" என்று சொல்லும் பரணி, இசைக்காகவே 'பார்வை ஒன்றே போதுமே' படம் வெற்றிகரமாக ஓடியதில் 'ராசியான இசையமைப்பாளர்' என்று பெயரெடுத்துவிட்டார்.

"அப்பா ஏழை விவசாயி, அம்மா குடும்பத் தலைவி. வீட்டில் எத்தனை கஷ்டம் என்றாலும் எல்லாவற்றையும் அம்மா இசையின் துணைகொண்டு ஜெயித்துக்காட்டுவார். எந்த வேலையென்றாலும் பாடிக் கொண்டே செய்து முடிப்பதில் அம்மாவுக்கு நிகர் அம்மாதான். வாசல்தெளிக்க ஒரு பாட்டு, பெருக்கும்போது ஒரு பாட்டு, சாதம் வடிக்கையில் ஒரு பாட்டு, சாப்பாடு பரிமாறும்போது ஒரு பாட்டு... கிராமியப் பாடலில் தொடங்கி இன்றைய சினிமா பாடல்கள் வரை அம்மாவுக்கு எல்லாப் பாடல்களும் அத்துப்படி. கடைக்குச் செல்ல, அப்பாவுக்குச் சாப்பாடு கொண்டு செல்ல நான் அம்மாவிடம் ஒவ்வொரு முறையும் கேட்ட சன்மானம் ஒரு பாட்டு! இப்படித்தான் நானும் அம்மாவின் அலங்காரமில்லாத பாட்டுக்கு அடிமையானேன். எனது இசைவேர்கள் அவரிடமிருந்து கிளைத்தன" என ஒரு கவிஞனைப் போலப் பேசும் பரணி முதலில் அறிமுகமானது ஒரு பாடலாசிரியராகத்தான்.

"இசையமைப்பாளராக வேண்டும் என்ற வெறியோடு, பத்தாம் வகுப்பு முடித்ததும் சென்னைக்கு ஓடி வந்தேன். ஓராண்டு வரை நான் எங்கே இருக்கிறேன் என்பதைக் கூட வீட்டுக்குச் சொல்லவில்லை. இசை இயக்குனர் ஆசை இருந்ததே தவிர இசைக் கருவிகளின் பரிச்சயம் கூட கிடையாது. எனக்கு வழி காட்டவும் துணையில்லை. எப்படியோ தட்டுத் தடுமாறி இசைஞானியின் குழுவில் வாசிக்கும் கலைஞர்கள் பலரிடம்

உதவியாளனாகச் சேர்ந்தேன். அங்கேதான் ஹார்மோனியத்தையும், கீபோர்டையும் தொட்டுப் பார்த்தேன். பிறகு கை போன போக்கில் கட்டைகளைத் தொட்டு வாசித்தேன். அவர்கள் வாசிப்பதையும் நிறைய கவனித்தேன். ஒரு பாடலுக்காக உருவாக்கப்படும் மெட்டுக்கு நோட்ஸ் எழுதத் தெரிந்தால்தான் இசையமைக்க முடியும் என்று தெரிந்து கொள்ளவே ஐந்து வருடங்கள் ஆகிவிட்டன.

அதன் பிறகு வாத்தியங்களின் துணையின்றியே மெட்டுகளை உருவாக்கும் வித்தை வசப்பட்டது. அப்படிப் போட்ட சில மெட்டுக்களுக்கு நானே பாடல் எழுதி எடுத்துக் கொண்டு இயக்குனர் எஸ்.ஏ. சந்திரசேகரிடம் பாடிக் காட்டினேன். அவருக்குப் பாடல் வரிகள் பிடித்துப் போய்விட்டன. நான் அவரிடம் தவமிருந்தது இசை இயக்குனர் ஆக்குங்கள் என்று. அவர் கொடுத்ததோ பாடலாசிரியர் வரம்! விஜய் அறிமுகமான 'நாளைய தீர்ப்பு' படத்தில் என்னையும் பாடலாசிரியராக அறிமுகப்படுத்தினார்'' என்கிறார் பரணி.

பரணியின் லட்சியக் கனவு நனவானதும் எஸ்.ஏ.சந்திரசேகரால்தான்.

"மீண்டும் என்னைப் பாட்டெழுத அழைத்தார். இனி இசையமைப்பாளர் ஆவது தவிர வேறில்லை என்றேன். அவரே என்னை இசையமைப்பாளராகவும் அறிமுகப்படுத்தினார். அவருக்கு என் இசைப்பூர்வமான நன்றி'' என்று சொல்லும் பரணி முதலில் இசையமைத்தது விஜய்காந்த் நடித்த 'பெரியண்ணா' படத்துக்கு. இப்போது 'சார்லி சாப்ளின்' படத்தின் பாடல்கள், பின்னணி இசை இரண்டுக்குமே பாராட்டுகள் குவிந்து கொண்டிருக்க, பரணியின் கையில் ஒரு டஜன் படங்கள். தவிர ஹிந்தியிலும் அழைப்பு. அங்கேயும் இரண்டு படங்களை ஒப்புக்கொண்டிருக்கிறார்.

பரணியிடமிருந்து எல்லா மெட்டுக்களும் மெலடியாகவே பிரசவிப்பது எப்படி?

"இசை என்பது மனித உணர்வை ஊடுருவித் தாக்க வேண்டும். அப்படித் தாக்கி வெற்றி பெற்ற பாடல்கள் எல்லாம் மென்மையான இசைதான். என்னைப் பாதித்த இசை எதுவோ, அதன் சாயலோடு எனக்கான இசையை உருவாக்க முயற்சி செய்கிறேன். இது பரணியின் இசை என்று எல்லோரும் சொல்ல வேண்டும் என்று சொல்லும் பரணியின் தாடி ரகசியம் என்னவாம்?

# சும்மா... சும்மா... பாட்டு!

"சிரித்த நாட்களைவிட அழுத நாட்களே அதிகம். அன்று இழையோடிய சோகத்தின் பிரதிபலிப்பாக இந்த தாடி தங்கிவிட்டது. என்றாலும், தாடியில்லாமல் என் முகத்தைப் பார்க்க எனக்கே போரடிக்கும். மனைவி கேட்டுக் கொண்டால் தாடிக்குத் தடா போடலாம் என்றிருக்கிறேன்'' என்ற பரணி ஒரு கட்டை பிரம்மச்சாரி.

சந்திப்பு : **சக்கரத்தாழ்வார்**

படங்கள் : **வர்ஷா**



# நீங்கள் கேட்டவை - தராசு!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 20.

*? சிதார் இசைக் கலைஞர் ரவி சங்கருக்கு மூன்றாவது முறையாக 'கிராமி' விருது கிடைத்திருக்கிறதே...?'*

! இந்தியாவின் புகழை இன்று உலகளாவிய அளவில் கட்டிக் காத்துக் கொண்டிருப்பது கலை – இலக்கியத் துறை மட்டும்தான். அதற்குத் தலைமை தாங்கி வரும் ரவிசங்கருக்கு நமது வாழ்த்து மட்டுமின்றி நன்றியும்கூட.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

*? கவர்னர் உரை முடியும் வரையிலாவது தி.மு.கவினர் சட்டமன்றத்தில் இருந்து மரபைக் காத்திருக்கலாம் அல்லவா...?*

! மரபு என்று பார்த்தால், வெளியேறியதற்கு முன்னுதாரணங்களை அடுக்குவார்கள். புதிய ஆரோக்கியமான மரபுகளை உருவாக்க வேண்டும் என்று சொல்லலாம்.

• சந்திப்புச் செய்தி!

● பொன்விழி, அன்னூர்.

*? கலைஞருக்குப் பதில் சொல்ல, தமக்கு நேரமில்லை என்கிறாரே ஜெ?*

! பின்னே, 'முடியவில்லை; தெரியவில்லை' என்றா கூறுவார்!

● நகை தி.மகராசன், கடமலைக்குண்டு.

*? ரஜினி – கலைஞர் சந்திப்பு...?*

! அதிலே ஒண்ணும் 'ஜூஸ்' இல்லீங்க; அம்மாவுக்கு அவர் தூதர் மூலம் பொக்கே அனுப்ப, அம்மா அதைத் தாமே வாங்காமல், தமது பிரதி நிதியை அனுப்பி வாங்கச் செய்தது தாங்க 'நொறுக்கு!'

● என். ரத்தினம், கம்பம்.

*? அருந்ததி ராய்க்கு சுப்ரீம் கோர்ட் கொடுத்த தண்டனை பற்றி...?*





• நவரச நாடகம்!



! தண்டனை மிகச் சிறிதாயினும் வழங்கப்பட்ட தீர்ப்பு மிக முக்கியமானது. தொடர்ந்து நடத்தப்பட்ட நவரச நாடகத்தில் தீர்ப்பின் முக்கியத்துவம் பின்னுக்குத் தள்ளப் பட்டு விட்டது. எல்லோரும் அதைப் படித்துப் பார்ப்பது நல்லது.

● த. சத்தியநாராயணன், அயன்புரம். ●

*? மனித நேயம் எப்போது சாம்பலாகிப் போகிறது?*

! மின் கட்டணத்தை ஒரேயடியாக உயர்த்தியது போதாதென்று செக்யூரிட்டி டெபாஸிட்டை வேறு கூடவே உயர்த்தி, 'உடனே கட்டு; இல்லாவிட்டால் மின் துண்டிப்பு!' என்று மிரட்டும்போது! முன்பெல்லாம் கூடுகிற டெபாஸிட்டை தவணை முறையில் வசூலித்து வந்தார்கள். நோட்டீஸ் கொடுப்பார்கள்; வட்டி கழிப்பார்கள். ம்ம்ஹூம்! அதெல்லாம் போச்சு புது ஆட்சியில்!

● கே. முருகேசன், அரியமங்கலம்.

*? 'பழைய குருடி கதவைத் திறடி!' ஏதாவது உதாரண விளக்கம் இருக்கிறதா?*

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
சி. சுரேஷ்,
146, தங்கவேலு முதலி தெரு,
திருக்கண்டேஸ்வரம் - 607 105



# ரஜினி-கலைஞர் சந்திப்பு...?

● சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை.

**? 'காலில் விழுவதை நிறுத்த மாட்டீர்களா?' என்று அமைச்சர்களிடம் ஜெ. கோபித்துக் கொள்வது நல்ல மாறுதல்தானே?...**

! பார்த்த நாடகத்தையே திரும்பத் திரும்பப் பார்க்கும்போது, டயலாக்கிலாவது சிறிதளவு மாற்றங்கள் செய்யாமல் போனால் அலுப்புத் தட்டிவிடும் என்று சோ, எஸ்வி. சேகர் போன்றோருக்கு மட்டுமின்றி ஜெ.க்கும் தெரியும்.

● சி. சுரேஷ், திருக்கண்டேஸ்வரம். ❐

**? உலகக் கோப்பை ஹாக்கியில் இந்திய அணியின் படுதோல்விக்கு யார் காரணம்?**

! இதுகூடவா தெரியாது?... நம்மை விடச் சிறப்பான முறையில் ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி அளித்து, களத்தில் இறக்கிய பிற நாட்டவர்தான்!

● ஜி.எஸ்.நந்தினி, மயிலாடுதுறை.

**? இடப்பிரச்னையில் அம்மாவின் வருத்தம் கூறல்; பேராசிரியரின் விளக்கம் கோரல் – எது எதை மிஞ்சியது?**

! கருணாநிதியிடம் கடுப்பும் பேராசிரியரிடம் பரிவும் காட்டி, அவர்களிடையே ஓர் இடைவெளியை உருவாக்க முயலும் ஜெவின் பேச்சுகள் அக்னி அஸ்திரம்; பேராசிரியர் பதில்கள் வருண அஸ்திரம்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

**? தி.மு.க. தலைவர் கருணாநிதியை ஒப்பிடும் போது ஜெயலலிதா நூறு மடங்கு நல்லவர் என்று சு.சுவாமி சொல்கிறாரே...?**

! சுப்பிரமணிய சுவாமியை ஒப்பிடும் போது கலகக்கார நாரதர் ஆயிரம் மடங்கு நல்லவர்!



• வருணாஸ்திரம்!



• நன்மையில் முழுமை



• தகுதியில் வளர்ச்சி

! அயோத்தி விவகாரம் இருக்கிறதே!

● கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர்.

**? அமைதியான சபாநாயகருக்கு இப்படி ஓர் அகால மரணம் நேர்ந்தது பற்றி...?**

! பேரிழப்புதான்! பா.ஜ.கவில் பல மூத்த தலைவர்கள் இருந்தபோதும் தெலுங்கு தேசம் கட்சியைத் திருப்திப்படுத்த வேண்டும் என்பதற்காகவே அரசியல் அனுபவமில்லாத பாலயோகிக்கு சபாநாயகர் பதவி வழங்கப்பட்டது. 'சரியாகச் செயல்படுவாரா?' என்று எல்லோரும் கவலைப்பட்டபோது, எதிர்பார்த்ததைவிட மிகச் சிறப்பாகச் செயல்பட்டவர். தலித் இனத்திலிருந்து வந்த முதல் சபாநாயகர். சபாநாயகர்ட பதவி வகித்தவர்களிலேயே இளம் வயதுக்காரர். நல்ல மனிதர்.

● ரூ. 50/- பரிசு பெறுபவர்:
த. சத்தியநாராயணன்,
61, பழனியாண்டவர் கோயில் தெரு,
அயன்புரம், சென்னை - 600 023.

விளாம்பழ ஓடு மாதிரி வெளுத்திருந்தது அந்தக் காலை. இத்தனை வைகறையில், அமிர்தா வருவாள் என்று எதிர்பார்க்கவில்லை, ரேணு. தபாலும் போடாமல், தகவலும் கொடுக்காமல், அமிர்தா வந்து கதவைத் தட்டிக் கொண்டு உள்ளே நுழைந்தாள். மலை அடிவாரத்தில், குளிரவே செய்தது. ஸ்டவ்வை ஏற்றிக் காப்பி போட்டுக் கொடுத்தாள். 'என்ன சங்கதி' என்ற தோழிக்கு அமிர்தா சொன்னாள்.

"ஒரு சங்கதியும் இல்லை. ஒரு காரணமும் இல்லை. காரணம் இல்லாமல், காரியம் இருக்கக் கூடாதா? மனம் உத்தரவிட்டது. வந்தேன். ரொம்ப நாளாக நரசிங்கமலையின் உச்சியைக் காண வேணும் என்கிற ஆசை அரித்துக் கொண்டே இருந்தது." மலையில் ஒன்றும் இல்லை. மரம், செடி, கொடிகள், புழு, பூச்சிகள், பாம்புகள், சமயங்களில் சிறுத்தைகள், கழுதைப் புலிகள் கூட உலாவுவதாகக் கேள்வி என்று பயம் காட்டினாள் ரேணு.

"மலையில் மலை இருக்கு, அது போதும்" என்றாள் அமிர்தா. ஊர்வன, பறப்பன, விலங்குகள் எல்லாம் இருக்கத்தான் இருக்கும். உலகம், என்ன மனிதர்க்கு மட்டும் தானா சொந்தம். சொல்லப் போனால், முதல் உயிர் தொடங்கி, மக்கள், நரகர், தேவர் எல்லோர்க்கும் உலகம் சொந்தம்.

உப்புமா என்கிற நூதன பலகாரம் பண்ணினாள் ரேணு. மலை உச்சியில், ரேணு வேலை செய்யும் நிறுவனத்தின் விருந்து மாளிகை இருக்கிறது. அதன் காவலாளிக்குக் கடிதம் கொடுத்தாள். வாங்கிக் கொண்டு புறப்பட்டாள் அமிர்தா. படிகள் இருந்தன. பல இடங்களில் மண் பாதை இருந்தது. திடும் திடும் என்று மலை அருவிகள் பெரும் சத்தத்துடன் வீழ்ந்தன. நீர்வீழ்ச்சி எனலாமா? கூடாது. நீருக்கு ஏது வீழ்ச்சி?

# 4



அடி மேல் அடி வைத்து உச்சியை நோக்கி முன் ஏறினாள் அவள். அதிகம் நடமாட்டமற்ற பூமி என்பது, தாவரங்களின் சுயேச்சையான வளர்ச்சியில் தெரிந்தது. மனிதப் புழக்கம் கூடக் கூடத் தாவரங்கள், வியாபகத்தைச் சுருக்கிக் கொள்கின்றன போலும். வித்தியாசமான வாசனைகள், அவள் நாசிக்கு எட்டின. கரும்புகை தொட்டு கடுகு தாளிப்பு வரையான பௌதிக வாசனைகளை மட்டுமே பழகிய அவளுக்கு இந்த மணம், வித்தியாசமாக இருந்து புத்துணர்ச்சியைத் தந்தது. அறிமுகம் இல்லாத பறவைகள், காற்றோடும் தம்மோடும் ரகசியம் அற்றுப் பேசிக் கொள்வதைக் கேட்டாள். ஏதோ ஒரு சுற்றுப் பாதையில், மேல் ஏறும் ஜீப்பின் உறுமல் சத்தம், காதை அறுத்தது. சில குறிப்பிட்ட வகைப் பூச்செடிகளையே பார்த்துப்

**பிரபஞ்சன்**

பரிச்சயம் கொண்ட அவள் கண்களுக்கு, பாதையின் இருபுறமும் பூத்துச் சொரிந்த பூச்செடிகள் அதிசயம் ஊட்டின. நின்று நிதானமாக, எல்லாவற்றையும் பார்த்து உள் வாங்கிக் கொண்டே மேல் வந்து சேர்ந்தாள். பக்கவாட்டில், சமதளத்தில் பயிர் செய் திருந்தார்கள். கற்பாறைகளின் ஊடே, வளர்ந்து செழித்த பச்சைப் பயிர்கள், விவ சாயியின் வியர்வையின் அளவைச் சொல்வ

பாதங்கள் இருந்தன. ஆகவே, மோகினிப் பிசாசு இல்லை. கொத்துச் சாவியை எடுத்து, அறைக் கதவைத் திறந்தார். எல்லா ஜன்னல்களும் அடைந்திருந்தன. என்றாலும் குளிர் நடுக்கியது. அமிர்தா, புடைவைத் தலைப்பால் போர்த்திக் கொண்டாள்.

"ஹீட்டர் போட்டுக்குங்கோம்மா. இங்க என்ன இருக்குன்னு, இவ்வளவு தூரம் தனியா வந்தீங்களோ? காபி கொண்டா றேன். மணி, இப்பவே நாலாயிடுச்சு. சீக்கிரம்

# வாசனை



தாக இருந்தது.

திடுமென அவள் முன், ஒரு பெரும் சம வெளி நீண்டது. வானத் துக்கு மிக அருகாக வந்து விட் டாற்போலத் தோன்றியது. ஒரு பாறையின் மேல் ஏறி நின்று, வானத் தைத் தொட்டு விடுகிறாற் போலக் கையை உயர்த்தினாள். தொட்டாள்.

வானம், மனசில் உள்ள மேகத்தால் ஆன தரைசி வேறு என்ன? அவள் உடம்பு சிதறி யது. பருண்மை, துணுக்குளாக மாறியது. சிதறியது. அவள் அணுவானாள். காற்றில் பூந்துகள் எனக் கலந்தாள். அவளே ஆகாச மானாள்.

காவலாளி எனத் தென்பட்டவர், முதலில் அவள் பாதத்தைத்தான் பார்த்தார்.

இருட்டிடும். ஏழு மணிக்கு டிபன் கொண்டாறேன். என்ன டிபன்? பெரிசா ஒன்றுமில்லை. பூரி அல்லது சப்பாத்தி. இட்லி, தோசையும் போடலாம். புளிக்காத மாவுதான். என்ன பண்ண?"

"யார் சமையல் உங்க வீட்டுலயா?"

"நான்தாம்மா... நல்லா சமைப்பேன்."

"இட்லியோ, பூரியோ, இருந்தா சரி."

தண்ணீர் பிடித்து வைத்து விட்டு அவர் அகன்றார்.

ஜன்னல் ஓரம் அமர்ந்தாள் அமிர்தா. கண்ணாடிக் கதவைச் சற்றே திறந்தாள். குபுக்கென்று, சீறிக் கொண்டு வந்தது, குளிர்க்காற்று வாடை. வடக்கிலிருந்து வந்தால்தானே வாடை? இது எங்கிருந்து வருகிறதோ? பழந்தமிழர்கள், இந்த நிலத்தைக் குறிஞ்சி என்பார்கள். நிலத்துக்குப் பெயர் கூடப் பூக்களின் பெயர்களாக வைத்த தன் மூதாதையர்களை ஒருகணம் நினைத்துப் பரவசம் அடைந்தாள். குறிஞ்சி நிலம், காதலுக்கான இடம். காதல் கூடும் இடம். மனிதர்கள், தங்களை ஆண் என்றும் பெண் என்றும் அடையாளம் காணும் நிலம்.

காப்பியுடன் வந்தார், காவல்காரர்.

"சீக்கிரம் சாப்பிடுங்கம்மா. ஆறிடும். குளிர் இல்லையா?"

"உக்காருங்களேன்."

அவர் நின்றார். பெயர் தேவராஜ் நாயுடு என்றார், அவள் கேட்டதுக்கு.

தனியாவே இருக்கீங்க.

"ஆமாம்" என்றார். காப்பி, காப்பிமாதிரி இருந்தது. அவள் பையைத் திறந்து, இருபது ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்தாள். ரொம்பவும் குனிந்து அவர் அதை வாங்கிக் கொண்டார். முகம், நன்றியில் நனைந்திருந்தது. அவள் போன்ற, ஓர் இளம் பெண், இந்த அத்துவான வெளிக்கு எதைத் தேடி வந்திருக்க முடியும் என்பது அவர் கேள்வியாக இருந்தது. என்னமோ, எனக்கு இது வேண்டியிருந்தது என்று அவள் பதில் சொன்னாள். எதையானும் பார்க்க, அடைய, தேட, புரிய வேண்டியிருக்கிறது மனுஷர்களுக்கு. இல்லையா? அது உள்ளது என்று அவர் ஒப்புக் கொண்டார். அவர் குடும்பம் பற்றி அவள் கேட்டாள். அவர் தங்குதடையின்றிச் சொன்னார். உறவுக்காரப் பெண்ணே அவர் மனைவியாக அமைந்தாள். அப்போது அவர், அரசு விடுதி ஒன்றில் வாட்ச்மேன் வேலை பார்த்து வந்தார். ஒரு குழந்தை அவர்களுக்கு. அப்போதெல்லாம் வழக்கில் இருந்த அம்மை நோயில் குழந்தை குளிர்ந்து போய் விட்டது. அப்புறம், அவர் மனைவிக்கு, வேறு ஒருவருடன் சினேகம் ஏற்பட்டு விட்டது. யாரையும் குற்றம் சொல்லத் தயார் இல்லை அவர். மனிதப் பழக்கவழக்கத்தில் எதுவும் தப்பு, பிழை, குற்றம் என்று எதுவும் இல்லை. அதோடு, இதெல்லாம் காலம் காலமாக நடக்கிறதுதானே? எதுதான் புதுசு, அம்மா? உலகில் எதுவும் புதுசு இல்லை. சட்டை வேறு. உடம்பு ஒன்றுதான். அவள் சந்தோஷம் அவனிடம்தான் என்றால் யார் என்ன சொல்ல இருக்கிறது? காற்றைக் கட்டிப் போடுகிற கதைதான். அப்புறம், இவர், இங்கு வந்து விட்டார். ஆச்சு. ஊருக்குப் போகவே இல்லை. எப்படியும் கட்டை மண்ணில் சாயும் போது, அவர் அங்குதான் அடக்கம் ஆவார். என்ன? அப்படியும் அவர்கள் சந்தோஷமாக இருந்தார்களா, என்றால் இல்லை. அந்தப் பாவி, அவளை விட்டு ஓடிப் போனான். இரண்டு குழந்தைகளுடன் கஷ்ட ஜீவனம். மாதா மாதம், சம்பளம் வாங்கிக் கொஞ்சம் அவளுக்கு அனுப்புகிறார், நாயுடு.

"எனக்கு அவளும், அவளுக்கு நானும் தானேம்மா?"

வெளியே இருட்டிக் கொண்டு வந்தது. இருட்டு, கதவைத் தட்டுமா? தட்டும்.

நாயுடு சென்றதும், வெந்நீரில், குளித்தாள். நடந்த அலுப்பு. தரையில் தண்ணீராய் வழிந்தது. மனசை அடைத்துக் கொண்டிருந்த இருட்டு, பழஞ்சாமான்கள், பழைய கூடைகள், பழைய ஜாதிக்காய்ப் பெட்டிகள், பழைய நடைவண்டி, மரப்பாச்சி, அவன் நினைவு, அவன் போகும் போது, உனக்கு நான் தகுதியானவன் இல்லை என்று சொன்ன சொல், எல்லாம் காலடியில்

"ஊனமுற்றோர் ஒதுக்கீட்டில வேலை கேட்கிறாயே. உனக்கு உடல் ஊனமே இல்லையே..."

"காதல் தோல்வி சார். மனசு ஒடிந்து போய் வந்து நிக்கறேன் சார்!"

- லலிதா செல்லப்பா



வழிந்து போவதை அவள் பார்த்தாள். ஆகாய வண்ணத்து நைட்டியை எடுத்து அணிந்து கொண்டாள். கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். வாசல் விளக்கேற்றி, இருட்டு கனத்து முற்றுகை இட்டாற்போல அவளைச் சுற்றிக் கொண்டிருந்தது. அருபங்களிலிருந்து வந்தன சப்தங்கள். இருட்டின வாசனையை அவளால் முகர முடிந்தது. வாசனை இல்லாத வாசனை அது.

உணவுடன் திரும்பினார், நாயுடு.

"என்னம்மா, இந்த குளிர்ல வெளியில நிக்கறீங்க. சளி பிடிச்சுக்கப் போகுது. உள்ளே போங்க. சாப்பிட்டுடுங்க. தூங்குங்க... ஞாபகமா, கதவைப் போட்டுக்குங்க. ஏதேனும் வேணும்னா, ஒரு குரல் கொடுங்க."

பசித்தது. உப்பிய பூரிகளைப் பிட்டு உண்டாள்.

வெளியே வந்தாள்.

வானத்தில் வெளிச்ச வட்டமாக நிலா.

வெறித்தனமாக ஒளியைப் பொழிந்து கொண்டிருந்தது அந்த நிலா.

அவன் இருக்கும் போதும், ஒருநாள் இப்படித்தான் பைத்தியம் பிடித்தபடி காய்ந்து கொண்டிருந்தது. அது, அவர்களுக்குக் கல்யாணம் ஆன சில நாட்களுக்குள் நடந்தது. அப்போது அவர்கள், மொட்டை மாடியில், ஜமக்காளம் விரித்துக் கட்டைச் சுவரில் சாய்ந்து கொண்டு அமர்ந்திருந்தார்கள்.

அவள் பாதி மூடிய விழிகள், கனவில் மிதக்க, "எனக்கு வெளிச்ச விழுதுகளைப் பிடித்துக் கொண்டு மேலே ஏற ஆசை. வானத்துக்கு, உயரத்துக்கு. நிலாவுக்கு. மேலே. மேலே. இன்னும் மேலே. எல்லாவற்றுக்கும் மேலே" என்றாள்.

வறுத்த வேர்க்கடலையைத் தின்றபடி அவன் சொன்னான். சொல்லும் போது சிரித்தான். சிரிப்பு, சற்று இகழ்ச்சிக் குறிப்பு தோன்ற இருந்தது.

"நிலா, ஆலமரமா, விழுது விட? அதைப் பிடிச்சுக்கிட்டு மேல ஏறுவாயா? சே. என்ன சொத்தைக் கடலை. தரித்திரம். இந்தச் சொத்தைக் கடலை, வாயையே கெடுத்துடுச்சு."

அவன் பேச்சு அமிர்தாவின் காதுகளில் விழவே இல்லை. அவள் கனவின் ரப்பர் பாதையை மிதித்தபடி நடந்து கொண்டிருந்தாள்.



"தேர்தல்லே ஜெயிச்ச உடனே இடுகாட்டைப் பார்த்து தலைவர் கும்பிடுறாரே... ஏன்?"

"அவருக்குக் கிடைச்சதுலே செத்தவங்க வாக்குதான் அதிகமாம்!"

- தஞ்சை தாமு

"எனக்கு அந்த நரசிங்க மலைக்குப் போகணும்."

அவன் பேசாமல் இருந்தான்.

"அங்கே போய் இரண்டு இரவுகளாவது தங்கணும்."

"அதைவிட ஊட்டிக்குப் போகலாமே. சாப்பாடு, தங்கும் இடம் சௌகர்யமாக இருக்கும். இப்போதெல்லாம், சிங்கமலை மாதிரி இடங்களில் பெண்கள் போவது பாதுகாப்பானதில்லை."

மனிதர்கள் எப்போதும் மோசமாக இருப்பதில்லை. ஆனால், அவன் தன் கருத்தில் பிடிவாதமாக இருந்தான். இதை அந்தப் பையனிடம் சொல்லியிருக்கலாம். மாஞ்சோலையில் வைத்துத் தன்னை நேசிப்பதாகச் சொன்னவனிடம். ஆனால், அவள் அவனை நிராகரித்து விட்டாள். அவள் படிக்கிற காலத்தில் புட்பால் வனிதாவிடம் சொல்லியிருக்கலாம். பள்ளியிலும், கல்லூரியிலும், புட்பால் சேம்பியன் என்று பெயர் வாங்கின வீராங்கனை அவள். கட்டாயம் 'போலாம்டி' என்று அழைத்து வந்து இருப்பாள். அப்போது தோணாமல் போச்சு. அப்பாவிடம் சொன்னாள் ஒரு முறை.

"சிங்கமலை... அங்க என்ன இருக்கு? சரியான ஹோட்டல் இல்லை. பாதுகாப்பு இல்லை. மிருகம் வந்தா, கேட்பார் இல்லை. அதோடு, அது டூரிஸ்ட் ஸ்பாட்டும் கூட இல்லையேம்மா" என்றார் அப்பா.

மனிதர் ஓரிடம் போக, ஏற்கெனவே மனிதர்கள் அங்கு போயிருக்க வேண்டும். யாரும், புதிய ஒற்றையடித் தடத்தையும் ஏற்படுத்தத் தயாராக இல்லை. எல்லாரும் இட்லி. நாமும் இட்லி. எல்லோரும் டாக்டர். நாமும் டாக்டர். எல்லோரும் அமெரிக்கா. நாமும் அமெரிக்கா. எல்லோரும் சதுரம் சதுரமாக வீடு கட்டுகிறார்கள். நாமும்.

அப்பாவிடம் வந்து பேசிய ரஷ்ய ஆராய்ச்சி மாணவி கேட்டது, சுவாரஸ்யமாக இருந்தது.

"எல்லோரும் வேறு வேறு தொழில்களை, வேறு வேறு ரசனைகள், வாழ்க்கை முறை கொண்டவர்களாக இருக்கிறார்கள். அவரவர் ரசனைக்கும் தேவைக்கும் ஏற்ப, ஏன் வீடு கட்ட மாட்டேன் என்கிறீர்கள்? சதுரம் சதுரமாக அறை வைத்துக் கொண்டு கட்டிக் கொள்கிறீர்கள். ஏன், உங்கள் வசிப்பிடம், உங்களைப் பிரதிபலிக்கிற வித்தியாசம் கொண்டதாக இல்லை. ஏன் 'கார்பன் காப்பியாகவே' வாழ்ந்து சாகிறீர்கள். ஏன், பழகின இடத்தை விட்டு வெளியே வர மறுக்கிறீர்கள்?"

அப்பா சொன்னார்.

"பயம். பழகிய பேய் என்ன செய்யும் என்பது தெரியும். மரபும், பழைமையும் தருகிற பாதுகாப்பு. விட்டு வெளியேற, பறந்து திரிய நெஞ்சுரம் வேணும். வாழ்க்கையைக் கடைசிச் சொட்டு வரை குடிக்க வேண்டும் என்கிற தாகம் இருக்கிறவர்கள் - அந்த மகான்கள் - அவர்களுக்கு அது சரி. நாங்கள் உழவு மாடுகள். எங்கள் கனவு புல்லும், நிழலும். சிறகுகள், மாடுகளுக்கு இல்லை."

அப்பா சரியாகத்தான் சொன்னார்.

தேவை, சிறகுகள்.

இற்றைத் திங்களிலும் அதே நிலவு. அதே, வெறித்தனமாகக் காய்ந்து கொண்டிருந்தது. ஒளி பொழிதல் என்ற இலக்கு மட்டுமே கொண்ட வாழ்க்கை அதனுடை-

யது. அதில் முழுமை காணும் முயற்சி.

பூர்ணத்துவம் என்பது இதுதான் போலும்.

"வாயேன்!"

தலையை உலுக்கிக் கொண்டாள், அமிர்தா. யார் அழைத்தது. நீயா? ஆம் என்றது மௌனமாக அந்த நிலா. கதவைச் சாத்திக் கொண்டு, அறையின் முன் இருந்த வெளியைக் கடந்து, பாதையின் விளிம்பு வரை நடந்தாள் அவள். மரங்கள் நரநரத்தன. தலைவிரித்து ஆடியது, ஒரு வளர்ந்த மரம். எருமை படுத்திருப்பது போன்று இருந்த கரிய பாறையின் மேல் ஏறி நின்றாள். கீழே கிடுகிடு என்று கீழ்நோக்கிப் பாயும் பெரும் பள்ளம்.

அவள் கையை உயர்த்தி வானத்தைத் தொட்டாள்.

தொட முடிந்தது. ஈரத்துணியைத் தொட்டாற்போலக் கை சில்லிட்டது. சாம்பிராணிப் புகை போல, வானம் அவளைச் சூழ்ந்தது.

"வா அமிர்தா" என்று அவள் காதருகில், மனசருகில், ஆத்மாவின் உள்ளிருந்து அழைத்தது அந்தப் பழைய குரல்.

"நீதானா? முதலில் அழைத்தாயே அந்தக் குரல்தானா?"

"ஆமாம்."

"என்னால் முடியுமா? யாராவது உன்னிடம் இதற்கு முந்தி வந்திருக்கிறார்களா?"

"பலரும் முயன்றார்கள். சிலர் வென்றார்கள். வெற்றி, லட்சியப்பூர்த்தி மட்டும் அல்லவே. லட்சியம்தான் ஜெயம். அதை நோக்கி ஒற்றைக் காலடி எடுத்து வைத்தால் கூட, அதுவும் ஜெயம்தான். பற. முதலில் உன் சிறகை விரி."

திடுமென அவளுக்கு அழுகை வந்தது. அழுகை ஓயும் மட்டும் அவள் அழுது முடித்தாள். காற்று, அவள் இரவாடையைப் பேயின் கைகளைப் போலக் கலைத்தது. இரும்பால் ஆனது போல இருந்தது அந்த உடை. கனத்தது. அவள், தன் உடையைக் கழற்றி எறிந்தாள். உடம்பு. உடம்பும் அவளும் மட்டுமே அந்தக் குன்றின் உச்சியில் நின்றார்கள்.

அவள் பறந்தாள். தன் கைகளை விரித்தாள். உயரப் பறப்பதாக அவள் நினைத்தாள்.

அவள் கால்களுக்குக் கீழ் இருந்த இருண்ட பள்ளம் அவளை விழுங்கத் தொடங்கியது.

(முற்றும்)

## திருக்குறள் பாருங்கள்!

திருக்குறளின் பெருமையை மேலும் நவீனமாக்கும் வண்ணம் மு.வ., பரிமேலழகர், மணக்குடவர், ஜி.யூ.போப் ஆகியோரின் புகழ் பெற்ற உரைகளை ஒரே குறுவட்டில் (அதாங்க! சிடி) ஒளி ஒலி காட்சிகளோடு மல்டி மீடியா சிடியாக படைத்திருக்கிறார்கள் சாஃப்ட்வியூ நிறுவனத்தினர். ஏற்கெனவே அவ்வையின் ஆத்திசூடி, குழந்தைகளுக்கான தமிழ்ப் பாடல்கள் போன்றவற்றைத் துணிந்து குறுவட்டுகளாக வெளியிட்ட அனுபவம் கைகொடுக்க, இம்முறை அசையும் படங்களோடு திருக்குறள் குறுவட்டு தயாரித்திருக்கிறார்கள்.




- ஜெ

# திருச்சி கோட்டை மியூசியம் ஆகுமா?



தகுந்த பராமரிப்போ, உரிய பாதுகாப்போ இல்லாமல் சிதில மடைந்திருந்த திருச்சி கோட்டை, தற்போது இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையால், சீரமைக்கப்பட்டு வருகிறது. விசுவநாத நாயக்கரால் கட்டப்பட்டு, திருமலை நாயக்கர், சொக்கநாத நாயக்கர், இராணி மங் கம்மாள் என நீண்டு வந்து, இறுதியாக இராணி மீனாட்சி ஆண்டவரை, மேன்மையுடன் திகழ்ந்த இக்கோட்டை, விரைவில் அருங்காட்சியமாக மாற்றப்படவிருக்கிறது.

நாம் சென்று பார்த்தபோது, கோட்டைக் கொத்தள உட்புற கட்டட அமைப்புகளில் சீரமைப்புப் பணிகள் ஜரூராக நடைபெற்றுக் கொண்டிருந்தன. சிதிலமடைந்த பகுதிகளை ஒரிஜினல் வடிவத்துக்குக் கொண்டுவருவது ஒரு சவால் என்றால், கோட்டை வாயிலின் வெளிப் புறப் பகுதிகளைச் சீரமைப்பது வெகு சிரமம் என்றே தோன்றுகிறது. காரணம் பர்மா பஜார் வியாபாரிகள் ஆக்ரமித்துள்ள கடைகள்.

கிட்டதட்ட ஐம்பது கடைகள் அங்குள்ளன. சுமார் ஐம்பது ஆண்டுகளாக இங்கு கடை வைத்திருப்பதால், காலி செய்ய மறுக்கிறார்கள்.

"நாற்பது வருஷமா கடை வைச்சிருக்கேன். திருச்சி கோட்டையை மியூசியம் ஆக்கட்டும். அதே நேரத்தில் எங்கள் கடைகளைக் காலி செய்யச் சொல்லாமல் இருக்கட்டும். இந்த இடத்தை நம்பி, ஐம்பது கடைக்காரர்களின் பிழைப்பு நடக்கிறது. நாங்க எங்கே போக முடியும்?" என்கிறார் இங்கே கடை வைத்திருக்கும் ஷாஜஹான்.

தொல்பொருள் ஆய்வுத்துறையின் திருச்சி - தஞ்சை மாவட்டங்களுக்கான சிறப்பு அதிகாரியும், பராமரிப்பு உதவியாளருமான பி. வாசுதேவனிடம் பேசினோம். "இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறை, திருச்சி கோட்டையைச் சீரமைப்பதற்கு முதல் கட்டமாக, நான்கரை இலட்ச ரூபாய் அனுமதித்துள்ளது. இங்கே இயங்கி வந்த தமிழக அரசின் கல்வி அலுவலகங்களை, பெரும் முயற்சி செய்து கையகப்படுத்தியுள்ளோம். கடைகளை அப்புறப்படுத்துவதற்குச் சட்டபூர்வமான நடவடிக்கைகளில் இறங்கியுள்ளோம். சீரமைப்புப் பணிகள் முடிந்ததும் அருங்காட்சியகம் அமைக்கப்படும்.

திருச்சி கோட்டை, விரைவில் மியூஸியம் ஆகுமா...? சுற்றுலாப் பயணிகள் மகிழ்ந்து மனக்கோட்டை கட்டலாமா?

கட்டுரை, படம்: **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

தேன் கூடு

# இறைவைத்த ரூபாய்நோட்டு!

மகான் ஒருவர் கூன் வளைந்து தெருவில் நடந்தார். எதிரே வந்த செல்வந்தர் அவரை அணுகி அதன் காரணம் கேட்டார்.

முதுகில் தம்முடைய பாவ மூட்டையைச் சுமப்பதாகவும் அதன் சுமைதான் அதற்குக் காரணம் என்றும் விளக்கினார் மகான்.

ஆனால் அவரது முதுகில் அப்படி எந்த மூட்டையையும் காணவில்லை.

''என் கண்ணில் எந்த மூட்டையும் தெரியவில்லையே!'' என்று வியப்போடு கேட்டார் செல்வந்தர்.

''ஒருவன் மனத்தால் செய்யும் பாவம் மற்றவன் கண்ணுக்குத் தெரிவதில்லை. செய்தவனுக்கு மட்டும்தான் அது தெரியும். அவன்தான் அதை உணரவேண்டும்'' என்று கூறி அவரை அனுப்பி வைத்தார் மகான்.

மறுநாள் செல்வந்தர் மீண்டும் மகானைத் தரிசித்தார்.

''நேற்று என் கண்களைத் திறந்து விட்டீர்கள். நானும் என் பாவங்களை இப்போது உணரத் தொடங்கி விட்டேன்'' என்றார்.

''நல்லது, கழுவாய் என்ன செய்யப்போகிறீர்கள்?''

''இதோ!'' என்று பின்னால் நின்ற ஓர் ஏழையைக் கை காட்டினார் செல்வந்தர்.

மகான் அந்த ஏழையைக் கேட்டார்:

''நீ ஏன் கூன் வளைந்து நிற்கிறாய்?''

ஏழை பதில் கூறினான்:

''நான் பாவங்களைச் சுமக்கிறேன். இதோ இந்தச் செல்வந்தர் செய்த பாவங்களைக் கூலிக்குச் சுமக்கிறேன். சுமை கொஞ்சம் அதிகம்தான்!''

— பார்வதவர்த்தினி

பெரும்பாலான மெக்கானிக் கடைகளில் 'இங்கு பழுது பார்க்கப்படும்' என பலகை வைத்துள்ளனர். இது சரியல்ல. 'இங்கு பழுது நீக்கப்படும்' என எழுதுவதே சரி.

— சு. கணேஷ்குமார்.

கூடவே வந்துகொண்டிருந்த நிழல், மனிதனைப் பார்த்து, ''மழை, வெயில், குளிர் என்று பாராமல் எந்த நேரமும் உன்னுடனேயே இருந்து நீ எங்கு சென்றாலும் தொடர்ந்து வருகிறேனே. நான்தான் உனது உற்ற நண்பன்!'' என்று கூறியது. அதற்கு மனிதன் கூறினான் இப்படி: ஆமாம். நீ சொல்வது ஓரளவு உண்மை. தகிக்கும் வெயில், நடுங்க வைக்கும் குளிர் இரண்டிலும் நீ கூடவே வருகிறாய். ஆனால், இருட்டில் என்னைத் தனியே விட்டுவிட்டு எங்கேயோ போய் விடுகிறாயே! வாழ்வின் இருண்ட நேரத்தில் அல்லவா நண்பனின் உதவி தேவை. இருட்டிலும் கூடகூடவே இருப்பவன் தான் உண்மையான நண்பன்!''

— புத்தனாம்பட்டி சி. மணி.





*ரூபாய் நோட்டுகளில் எழுதும் பழக்கம் சில பேருக்கு உண்டு. என்னிடம் வந்த ஒரு 10 ரூபாய் நோட்டில் இருந்த கவிதை ரசிக்க வைத்தது.*

*'உன்னை என் மனச்சிறையில் வைத்தேன். உங்க அப்பனோ என்னை மத்திய சிறையில் வைத்தான்!'*

– *த. கோவிந்தராஜன்*

**ர**ஷ்ய எழுத்தாளரான டால்ஸ்டாய் ஒரு நாள் வெளியே சென்றபோது எதிரில் ஒரு பிச்சைக் காரன் வந்தான்.

"பசியுடன் இருக்கிறேன்; பிச்சை போடுங்கள்" என்று கேட்டான்.

அவனுக்கு உதவ எண்ணினார் டால்ஸ்டாய். ஆனால் அவர் பையில் பணமில்லை!

"சகோதரனே! என்னிடம் இப்போது பணம் இல்லை. நீ என் வீட்டிற்கு வா; உனக்குப் பணம் தருவேன்" என்று அன்பு ததும்பக் கூறினார் டால்ஸ்டாய்.

பிச்சைக்காரன் தழுதழுத்த குரலில் "ஐயா, எனக்கு யாருமே இதுவரை அளிக்காத ஒரு பெரிய பிச்சையைத் தாங்கள் அளித்து விட்டீர்கள். என்னையும் ஒரு மனிதனாக மதித்து 'சகோதரனே' என்று அழைத்தீர்கள். எனக்கு அதுவே போதும்" என்று கூறிச் சென்றான்.

**ப**கவான் மகாவீரர் ஒரு தடவை தெரு வழியே சென்று கொண்டிருந்தபோது திடீரென நான்குபேர் அவரைச் சூழ்ந்து கொண்டு தாறுமாறாக அடிக்கத் தொடங்கினார்கள். மகாவீரர் அவர்களைத் தடுக்கவும் இல்லை; எதிர்க்கவும் இல்லை. இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர், "சுவாமி, எதற்காக இவ்வாறு அவர்கள் செய்த அக்கிரமத்தைச் சகித்துக் கொண்டீர்கள்?" என்று கேட்டார்.

"கோபத்தை யார் மீதேனும் காட்டி ஆக வேண்டிய கட்டாயம் அவர்களுக்கு ஏற்பட்டிருப்பதையும் புரிந்து கொண்டேன். நான் அவர்களைத் தடுத்தால் நிச்சயம் அவர்கள் வேறு யாரையாவது தேடிச் சென்று அடித்திருப்பார்கள். இப்போது அவர்கள் காப்பாற்றப்பட்டதோடு இந்த முரடர்களின் கோபமும் தணிந்தது. இரண்டு விதமான பலன் கிடைக்கும் என்பதற்காகத்தான் என்னை அடித்ததைச் சகித்துக் கொண்டேன் என்றார் மகாவீரர்.

– அ.ராஜா ரஹ்மான், கம்பம்.













'இவர் ஏன் இப்படி இருக்கார்? எல்லா உலக விஷயங்களையும் அலசத் தெரிந்த இவருக்கு இந்தச் சின்ன விஷயம் மட்டும் என் புரியவில்லை? ஆட்டோவுக்கும் சினிமாவுக்கும் கண்ணை மூடிக்கொண்டு காசைக் கரைக்கும் இவருக்கு, இந்த விஷயத்தில் மட்டும் ஏன் கஞ்சத்தனம்?'

குழந்தை அஸ்வின் பிறந்து ஓடிவிட்ட இந்த மூன்று வருடங்களில் கல்யாணி தன் கணவன் பட்டாபியை நினைத்து குமையாத நாளே இல்லை. எவ்வளவுதான் யோசித்தாலும், அவனுடைய இந்த முரண்பாடான போக்கு புரியாத புதிராகவே இருந்தது. சின்ன விஷயம் தானே என்று இருந்து விடவும் முடியவில்லை.

கல்யாணிக்குப் பட்டாபியை நினைத்தால் பெருமைதான். கல்லூரிப் பக்கம் கூட எட்டிப் பார்க்காத அவளுக்கு எம்.ஏ. படித்த வங்கி ஆபீசர் கணவனாக அமைந்தது அதிர்ஷ்டம்தான். பட்டாபி ரிசர்வ்ட் டைப். தான் உண்டு தன் வேலையுண்டு என்று ஒதுங்கியே இருப்பான். முகத்திலும் அப்படி ஓர் அழுத்தம்.

உணர்ச்சிகளைக் காட்டாத முகத்துக்கும் அவனுடைய உண்மையான குணத்துக்கும் சம்பந்தமே இல்லை என்பதை அவனுடன் கொஞ்ச நாள் பழகினால் தான் புரிந்து கொள்ள முடியும். கல்யாணம் ஆன புதிதில், ''கல் மாதிரி முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறாரே... இவருக்கு ரொம்ப முன் கோபம் வருமோ?'' என்றெல்லாம் சந்தேகப்பட்ட கல்யாணிக்கு, கல்யாணம் ஆன சில நாட்களிலேயே கணவருடைய இறுகிய வெளித்தோற்றம், வெளி உலகுக்காக தெரிந்தோ தெரியாமலோ கட்டிக் கொண்ட கல் கோட்டைதான் என்று புரிய ஆரம்பித்தது. போகப்போக, மெல்லிய உணர்வுகளை மதிக்கும் மனோபாவத்தை உணர்ந்து பூரித்தாள்.

ஐந்து ரூபாய்க்கு பூ வாங்கித் தருவது என்பது வங்கி ஆபீசருக்கு பெரிய விஷயமா என்று கேட்கலாம். ஆனால், பட்டாபி நாள் தவறாமல் ஆபீசிலிருந்து வந்து கதவைத் திறந்த உடனேயே பூப்பொட்டலத்தை



## ஜி.பி.சதுர்புஜன்

நீட்டும் பொழுது அவளுக்கு ஏற்படும் கிளர்ச்சியே தனி.

அன்று ஒரு நாள் அப்படித்தான். தலைவலி என்று கல்யாணி படுத்திருந்தாள். இன்னொருத்தராய் இருந்திருந்தால், ஆபீசிலிருந்து வந்ததும் மனைவி இப்படிக் காலை நீட்டிப் படுத்திருப்பதைப் பார்த்தால்,

கோபம்தான் வரும். பட்டாபி, அவன் கேட்காமலே, அமிர்தாஞ்சனத்தை எடுத்து மிருதுவாகத் தடவி விட்டான். கூடவே, சோம்பேறித்தனப்படாமல் தனக்கும் காபி கலந்து கொண்டு, அவளுக்கும் கொண்டு வந்து கொடுத்தான். நன்றியுடன் பார்த்த கல்யாணியிடம், "இது என்னம்மா... தினமும் நீ எனக்குச் செய்கிற பணிவிடைக்கு இது கூட செய்யாமல் இருந்தால் என்ன கணவன் நான்?" என்று கண்களாலேயே பதில் சொன்னான்.

அன்றாட வாழ்க்கையில் ஆரவாரம் இல்லாமல் இதுபோன்று கணவன் செய்யும் சின்னச்சின்ன காரியங்கள் கல்யாணியை வெகுவாகக் கவர்ந்திருந்தன. கதைகளிலே வரும் பொல்லாத கணவர்களும், மற்ற உறவினர்கள் வீட்டில் அவ்வப்போது நடக்கும் அடக்குமுறைகளையும் பார்க்கும் போதெல்லாம், "ஏதோ பூர்வ ஜென்மத்தின் பூஜா பலன்தான், நமக்கு இவர் கணவராய் வாய்த்திருக்கிறார்" என்று கல்யாணி அகமகிழ்ந்து போவாள்.

தன்னிடம் காட்டும் அதே அன்பை, தன் கணவன் மற்ற குடும்பத்தாரிடமும் காட்டுவது அவளுக்கு இரட்டிப்பு சந்தோஷத்தைக் கொடுத்தது. மாமனாருக்கு பாஸ்புக் என்ட்ரி போட்டு வாங்கி வருவதிலிருந்து மாமியாருக்கு பூஜைக்குப் பூ வாங்கி வருவது வரை எல்லாவற்றையுமே தன் கணவன் ஒரு தவம் போல் செய்து வருவதைப் பார்க்கப் பார்க்க கல்யாணிக்கு தானும் அவரைப் போல் மற்றவர்களுக்கு இன்னும் உபயோகமாகவும் பரிவோடும் இருக்க வேண்டும் என்று தோன்றும்.

# செல்லக்குட்டிக்கு...



'இப்படிப்பட்ட மனிதரிடம் ஒரு சின்ன குறை. எல்லோருடைய உணர்ச்சிகளையும், வேதனைகளையும் புரிந்து, மதிக்கத் தெரிந்த ஒரு மனிதருக்கு ஒரு குழந்தையின் உணர்வை மதிக்கத் தெரியவில்லை. அஸ்வின் பயலின் சின்னச் சின்ன ஆசைகளை ஏன் பூர்த்தி செய்யத் தோன்றவில்லை?' கல்யாணி குழம்பினாள்...

அஸ்வின் பிறந்த செய்தி கேட்டு திருநெல்வேலிக்கு விரைந்து வந்தபோது வாங்கி வந்த ஒரு கிலுகிலுப்பை மட்டும்தான் பட்டாபி தன்னுடைய செல்லக்குட்டிக்கு வாங்கிக் கொடுத்த ஒரே பொம்மை. அதுவும் இப்போது இரண்டு குமிழும் உடைந்து, உடைந்த பிளாஸ்டிக்குக்குக் கூடத் தேறாது என்றாகி விட்டது. அஸ்வினோ சமையலறையில் உள்ள பாத்திரங்கள், செருப்பு ஸ்டான்டிலுள்ள சாமான், மற்றும் ஹேங்கர், பூட்டு என்று கையில் கிடைத்த வீட்டுச் சாமான்களையெல்லாம் வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறான். அக்கம்பக்கத்து வீட்டுக் குழந்தைகள் அழகழகான மெஷின் கன்,



''பஸ் டிரைவரைக் கட்டிக் கிட்டது தப்பாப் போச்சுடி.''

''என்னடி நடந்தது?''

''அவர் கூட வெளியிலே கிளம்பினா பத்து மீட்டர் இடைவெளிவிட்டு வரச் சொல்றார்.''

– தேனி முருகேசன்

கார்கள், வீடியோ கேம்ஸ், பால்-பேட் என்று விதம் விதமாக வைத்துக் கொண்டு விளையாடுவதைப் பார்க்கும் போதெல்லாம் கல்யாணிக்கு அழுகை வந்துவிடும் போலிருக்கும்.

"நமக்கு இருப்பது ஒரே குழந்தைதானே... நல்ல பொம்மை ஏதாவது வாங்கிக் கொடுத்தால் என்ன குறைந்தா போயிடும்?" என்று கல்யாணி ஆரம்பிக்கும் போதெல்லாம், "அதெல்லாம் சுத்த வேஸ்ட். இரண்டு நாள்ல எல்லாத்தையும் உடைச்சுடுவான். வீட்டுலே இருக்கற சாமான்களை வைச்சுக்கிட்டு விளையாடினா போதும்" என்று சொல்லி விட்டு மேலும் வாக்குவாதம் தொடராமல் நழுவி விடுவான்.

அஸ்வின் விஷயத்தில் மட்டும் ஏன் இப்படி இருக்கிறார் என்று கல்யாணியின் மனம் கலங்கியது.

இப்படி இருக்கும்போதுதான் ஒரு நாள் அந்த நிகழ்ச்சி நடந்தது.

கல்யாணிக்கு தன் கண்களையே நம்ப முடியவில்லை.

அஸ்வினுக்கோ தலைகால் புரியவில்லை. அங்குமிங்கும் ஓடோடி, தாங்க முடியாத சந்தோஷத்தை தனக்கே உரிய மழலையில் தெரிவித்துக் கொண்டிருந்தான்.

ஆமாம், இதை யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும்? வெளியூர் போயிருந்த பட்டாபி, இரண்டடியில் அழகான செட்டியார் பொம்மையை வாங்கி வந்திருந்தான். அதைக் கூடத்தில் வைத்தால், உண்மையாகவே மளிகைக் கடையில் மிட்டாய் பாட்டில்களுக்குப் பின்னால் உட்கார்ந்திருக்கும் கடைக்காரர் போலிருந்தது. மெல்லிய மூச்சுக் காற்று பட்டால் கூட போதும், அந்த பொம்மை ஒரு புன்சிரிப்புடன் கண்ணை உருட்டிக் கொண்டு தலையை ஆட்டியது. அந்த ஜாலியான முகத்தை எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டிருக்கலாம். அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் வயது வித்தியாசம் பாராமல் வந்து செட்டியார் பொம்மையின் தலையை ஆட்டிவிட்டு மகிழ்ந்தார்கள். அஸ்வினோ, தன்னுடைய அனுமதி



''குருவுக்கு மிஞ்சிய சிஷ்யன்னு சொல்கிறாயே, அவ்வளவு புத்திசாலியா சிஷ்யன்?''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லை. மற்ற எல்லா சிஷ்யர்களும் குருவைவிட்டு ஓடிவிட்டார்கள். இவன் மட்டும்தான் பாக்கி!

– இரா. சீதாராமன்

இல்லாமல் யாரும் அந்த பொம்மையைத் தொடக்கூடாது என்று தடை உத்தரவு போட்டு தன்னுடைய சொத்துரிமையை நிலைநாட்டிக் கொண்டிருந்தான். இத்தனை நாள் தான் கணவனை நச்சரித்துக் கொண்டே இருந்ததுதான் இப்படி ஒரேடியாக ஒரே பொம்மையில் அஸ்வினுக்கு உலகத்தையே கொண்டு வந்து கொடுத்து விட்டார் என்று கல்யாணி அகமகிழ்ந்தாள்.

'ஆகா! இவரைப் போய் குழந்தையின் உணர்வை மதிக்கத் தெரியாதவர் என்று தப்பு கணக்கு போட்டோமே' என்று மனசுக்குள்ளே வருந்தினாள்.

சொந்த ஊருக்குப் போயிருந்த கல்யாணியின் மாமியார், மாமனார் இருவரும் மாயவரத்திலிருந்து வருவதாகக் கடிதம் வந்தது. அஸ்வினுக்குப் படு குஷி. கமலா பாட்டி வந்தால் கதை சொல்வாள். "செல்லக்குட்டிக்குத் திங்கறதுக்கு என்ன வைச்சுருக்கே?" என்று கேட்டு, முறுக்கு, சீடை என்று பெரிய பெரிய டப்பாக்களில் செய்து வைப்பாள். தாத்தாவோ கோயில், குளம் என்று தினம் எங்கேயாவது கூட்டிக் கொண்டு போவார்.

பட்டாபியும், அஸ்வினும் எக்மோர் சென்று பாட்டி தாத்தாவை வீட்டுக்குக் கூட்டி வந்தார்கள். வந்ததும் வராததுமாய், அஸ்வின், "தாத்தா, பாட்டி... இங்கே பாருங்கோ. அப்பா எனக்கு வாங்கித் தந்த செட்டியார் பொம்மையை" என்று சொல்லித் தலையை ஆட்டிவிட்டு தானும் கூடவே சேர்ந்து ஆடிக் காண்பித்தான்.

"ஆகா, ரொம்ப ஜோரா இருக்குடா" என்று பொக்கை வாயைத் திறந்து பாட்டி சிரித்தாள்.

கல்யாணி காபி கலக்க உள்ளே சென்றாள். போகிற போக்கில், தன் கணவரிடம் மாமனார் பேசியது காதில் விழுந்தது.

"ஏன்டா, பட்டாபி. கடைசியா உன் ஆசை தீர்ந்ததா? மாயவரம் மூக்குப் பொடிக் கடையிலே, சின்ன வயசிலே இந்த மாதிரி ஒரு பொம்மையைப் பார்த்துட்டு, உடனே வாங்கித்தான்னு பிடிவாதம் பிடிச்சே. கடைக்காரன் விளம்பரத்துக்காக வைச்சிருந்தது அது. இவ்வளவு நாளா அதை மனசில வைச்சிருந்தது, உன் இஷ்டப்படியே அதைத் தேடிப்பிடிச்சு வாங்கிட்டு வந்துட்டியே. பேஷ்!"

கல்யாணிக்கு ஏதோ புரிந்தது போலிருந்தது. ●






# பஷீர் பக்தர் சுரா!

தேனி மாவட்டத்தில், ஒடைப்பட்டி என்னும் சின்னஞ்சிறு கிராமம்தான் சு. ராஜசேகரின் சொந்த ஊர். முப்பதாண்டு காலமாய் சென்னை வாசத்தைத் தாக்குப் பிடித்து, தொடர்ந்து கொண்டிருக்கும் இந்த நாற்பத்தைந்து வயது இளைஞர் கோடம்பாக்கத்துக்கும், பத்திரிகை உலகுக்கும் நிரம்பவே பரிச்சய மானவர். ஆனால் சு. ராஜசேகர் என்றால் யாருக்கும் தெரியாது. அந்தப் பெயரின் சுருக்கமான 'சுரா' என்றால் "சீனியர் சினிமா பி.ஆர்.ஓ." என்று சொல்லிவிடு வார்கள். 'ஒரு சினிமா மக்கள் தொடர் பாளராக இருந்த அவரா? ஆச்சரியமா இருக்கே!' இப்படிப் பலரையும் தமது பக்கம் திரும்பிப் பார்க்க வைத்திருக்கிறார்

இந்த சுரா. அப்படி யென்ன பண்ணிவிட் டார். நடிகர், நடிகைகள் வட்டாரத்தில் வளைய வரும் இவர், தமது முகத் தையோ, மூக்கையோ பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டு விட் டாரா என்ன? இல்லை. ஆனால் அதைவிட மரி யாதைக்குரிய ஒரு புதிய முகம் கிடைத்திருக்கிறது அவருக்கு.

கடந்த ஆண்டின் சிறந்த மொழி பெயர்ப் பாளர் விருதை திருப்பூர் தமிழ்ச் சங்கம் இவருக்குத் தந்து கௌரவித்திருக் கிறது. நவீன மலையாள எழுத்தாளர் சக்கரியா வின் 'பாஸ்கரபட்டேல ரும் என் வாழ்க்கையும்' என்ற நாவலை மொழி பெயர்த்ததற்காக கிடைத்த விருது. இலக் கிய உலகு தன் கவனத்தை சுரா மீது திசை திருப்ப, இது மட்டுமே போது மானதா என்ற எண்ணம் எழுமுன், அவரது வெறித் தனமான மொழி






பெயர்ப்புகளைப் பற்றி ஒரு சின்ன அறிமுகம்.

மலையாள இலக்கியத்தின் கலங்கரை விளக்கமாக ஒளி வீசிக் கொண்டிருக்கும் வைக்கம் முகமது பஷீரின் ஐம்பது சதவிகித படைப்புகளை, கடந்த ஓராண்டுக்குள்ளேயே இவர் மொழி பெயர்த்துவிட, அவற்றை மொழி பெயர்ப்புகளுக்கு முக்கியத்துவம் தரும் புதுமைப் பித்தன் பதிப்பகம் எட்டு புத்தகங்களாக வெளியிட்டிருக்கிறது. தமிழில் கடந்த ஆண்டு வெளிவந்த சிறந்த இருபது புத்தகங்களைக் குறிப்பிட்டு எழுதிய எழுத்தாளர் பிரபஞ்சன், சுராவின் நான்கு மலையாள மொழி பெயர்ப்புகளையும் அவற்றில் அடக்குகிறார். இத்தனைக்கும் சுராவின் மொழி பெயர்ப்பில் அப்போது புத்தக வடிவம் பெற்றிருந்தவை அந்த நான்கு புத்தகங்கள்தான்.

ஆனால் இப்போது மொழி பெயர்ப்புகளின் பெரிய அணிவகுப்பு தொடங்கிவிட, வண்ணதாசன், பா.செயப்பிரகாசம் தொடங்கி இலக்கிய உலகிலிருந்து ஆச்சரியம் விலகாத பாராட்டு குவிந்து கொண்டிருக்கிறது சுராவுக்கு. அதுவும் மூலத்தின் தன்மையைச் சிதைத்துவிடாத முத்தான மொழி பெயர்ப்புகள் இத்தனை விரைவாய் எப்படி முடிகிறது என்கிற ரீதியில் பாராட்டுகள். சினிமா மக்கள் தொடர்பாளர் என்கிற செக்குமாட்டு வாழ்க்கையில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்த இவருக்குள் எப்படி நிகழ்ந்தது இந்தத் திடீர் வேதியியல் மாற்றம்.

பி.எஸ்சி. வேதியியலில் பட்டதாரியான சுரா சொல்கிறார்.

''எனது தாத்தா கேரள மாநிலம் மூணாறில் கொண்டு வாற தேயிலை எஸ்டேட்டில் கங்காணியாக வேலை பார்த்தவர். அங்கே எஸ்டேட்டுகளில் வேலை செய்கிற தமிழ்க் குடும்பங்கள் நிறைய. இரண்டரை ஃபர்லாங்கு தூரத்துக்கு ஒரு வீடு. மலை, சோலை, சுனை, பூக்கள் என்று இயற்கை ஆட்சி நடக்கும் ஏகாந்தம் நிறைந்த வனாந்திர வாழ்க்கை. சிறு வயதில் வசித்தது கேரளம் என்றாலும் அங்கே நான்காம் வகுப்பு வரை படித்தது தமிழ்ப் பள்ளியில்தான். அதன்பிறகு உயர்நிலை பள்ளிக் கல்வி போடிநாயக்கனூரில். பிறகு மதுரை வெள்ளைச்சாமி நாடார் கல்லூரியில் பி.யூ.சி. படித்தபோது நூலகத்தில் எனக்கொரு புத்தகம் கிடைத்தது. வைக்கம் முகமது பஷீர் எழுதிய 'பால்யகால சகி' நாவலின் தமிழ் மொழி பெயர்ப்பு. நூலகத்தில் யாருமற்ற பிற்பகல் தனிமையில் ஒரே மூச்சில் அதை வாசித்து முடித்ததும், விக்கி விக்கி அழத் தொடங்கினேன். நூலகர் ஓடி வந்து 'உனக்கு என்ன ஆச்சு'














என்று கேட்டதும்தான் இயல்பு நிலைக்குத் திரும்பினேன். இஸ்லாமிய வாழ்க்கைப் பின்புலத்தில் உயிரை உருக்கும் துன்பியல் முடிவோடு கூடிய டீனேஜ் காதல் கதை அது. இளம்பருவத்துத் தோழியை வாசிப்ப தற்கு முன் நிறைய தமிழ் எழுத்தாளர்களை ஓரளவு நான் வாசித்திருந்தாலும், தமிழில் ஏன் இப்படிப்பட்ட படைப்புகள் இல்லை என்று எண்ண வைத்தது. மலையாளம் படிக்கத் தெரிந்தால் பஷீரின் மற்ற படைப்பு களையும் வாசித்துவிடலாமே என்ற வேகம் உந்தித் தள்ளியது. 'முப்பது நாளில் மலை யாள பாஷை' புத்தகத்தை வாங்கி நானே சுயமாக அரிச்சுவடி கற்கத் தொடங்கினேன். 'மாத்ருபூமி' 'கலாகௌமுதி' வார இதழ்களை வாங்கி வந்து முதலில் பெட்டிச் செய்தி களை எழுத்துக் கூட்டிப் படிப்பேன். ஓராண்டுக்குள் சரளமான வாசிப்பு வசப் பட்டதும் 'மலையாள நாடு' வார இதழ் மலையாள இலக்கிய உலகின் தலைசிறந்த பத்து எழுத்தாளர்களைப் பற்றியும், அவர் களின் படைப்புகள் பற்றியும் தனது ஓணம் சிறப்பிழில் கட்டுரைகள் வெளியிட்டிருந்தது. அதுவும் என்னை வெகுவாக திசை திருப் பியது. தவிர பேராசிரியர் கே.எம். தரகன் எழுதிய கேரள சாகித்திய சரித்திரம் புத்தகம் மதுரையில் பழைய புத்தகக் கடையில் பொக்கிஷம் போல கிடைத்தது. எழுத்தச்சன் தொடங்கி தற்கால எழுத்தாளர்கள் வரை யிலுமான கேரள இலக்கிய வரலாறைத் தெரிந்து கொள்ள எனக்குப் பேருதவி புரிந்த புத்தகம். அதன் பிறகு கல்லூரிப் படிப்பு முடிந்து கேரளத்துக்குப் போனாலும் அங்கே பாறைகளில் படுத்துக் கொண்டு நான் வாசிக்கத் தொடங்கியது பஷீரின் படைப்பு களைத்தான். பஷீரின் படைப்புகளில் இது தான் உயர்ந்தது என்று எதையும் வகைப் படுத்த முடியாது. இதுதான் எனக்கும் நிரம் பப் பிடித்தது என்றெல்லாம் குறிப்பிட்டு சொல்லிவிட முடியாதபடி அவரின் ஒவ் வொரு படைப்பும் ,ஒரு மாஸ்டர் பீஸ். 'மதிலுகள்'. படித்துவிட்டு கொஞ்சகாலம் சிறைவாசம் செய்ய மனம் துடித்தது. 'பிரேம லேகனம்' (காதல் கடிதங்கள்) வாசித்துவிட்டு, மதுரையில் மணமாகாத மகள் இருக்கும் வீட்டு ஓனரைக் கொண்ட ஒரு வாடகை வீட்டில் தங்க விரும்பினேன். இப்படித்தான் பஷீரின் ஒவ்வொரு படைப்பும் என் வாழ்க்கையினூடாகப் பாய்ந்தன. பெரும் பாலும் தமது கதைகளில் பஷீரே நாயகன். அவர் சந்தித்த நிகழ்வுகளே கதைக்களம். பொய்யற்ற, பாமரனுக்கும் புரிகிற எழுத்து என்பதனால்தானே என்னவோ பஷீர் பக்தன் ஆனேன்." என்றவர் தொடர்ந்தார்.

“மதுரையில் படித்ததால் அங்கே 'ஜன் னல்', 'ஷெல்லி' ஆகிய இலக்கிய சிற்றிதழ் களை நடத்தி வந்த நண்பர்களோடு நட்பு ஏற்பட்டு, ஒரு வேலையையும் தேடிக் கொண்டேன். அங்கே இடது சாரி யதார்த்த இலக்கியத்தை ஆதரிக்கிற நண்பர்களின் தொடர்பும் மக்கள் கலை இலக்கியப் பெரு மன்றத்தின் திராவிடம் கழகப் பாசறையி லிருந்து வெளிவந்து கொண்டிருந்த பட் டறை இலக்கிய இதழிலுமாக எல்லா தரப்பு இலக்கிய நண்பர்களிடமும் பொதுவான இலக்கிய விரும்பியாக வலம் வந்த என்னை, பத்திரிகையாளர் சாவி சென்னைக்கு அழைத்து உதவியாசிரியராகச் சேர்த்துக் கொண்டார்.

தூரத்துச் சீமையாகப்பட்ட சென்னை வந்த எனக்கு கைகால் புரியவில்லை. பிறகு 'ஃபிலிமாலயா', 'மித்ரகைரளி' என்று பல பத்திரிகைகளில் நான் பணியாற்றினேன் என்றாலும், வாசிப்பதை மட்டும் விட வில்லை. எல்லா இலக்கியக் கூட்டங்களிலும் பார்வையாளனாக முன் வரிசையில் இருப்பேன். இங்கேதான், 'கணையாழி', 'மஞ்சரி', 'தாமரை', 'செம்மலர்' எல்லாம் எனக்கு அறிமுகமாயின. 'மதிலுகளை' மொழி பெயர்த்து மஞ்சரிக்குக் கொடுத் தேன். அது 1978ல் வெளிவந்தபோது எதையோ சாதித்துவிட்ட மகிழ்ச்சி. உற் சாகம் கரைபுரள புற உலகின் சந்தடி பற்றிய பிரக்ஞையற்று தினசரி ஐந்து மணி நேரத்தை மொழி பெயர்ப்புகளுக்காகவே செலவிட்டேன். அப்போது எனது மொழி பெயர்ப்புகள் வராத 'தாமரை'யே கிடை யாது.



சிகரம் பத்திரிகையின் உதவியாசிரியாக இருந்த இளையபாரதி 'யார் இந்த சுரா' என்று என்னைத் தேடி நேரில் காண வந்துவிட்டார். இளையபாரதி போல நிறைய நண்பர்கள் தேடி வந்து பாராட்டுவது மன நிறைவு அளித்தாலும், இலக்கியம் சோறு போடாது என்று விரைவிலேயே புரிந்து போனது. சினிமா பத்திரிகையில் பணியாற்றியதாலோ என்னவோ சினிமா மக்கள் தொடர்பாளர் ஆக்கப்பட்டேன். கோமல் சுவாமிநாதன் இயக்கிய 'சாதிக்கொரு நீதி' படம்தான், நான் பணியாற்றிய முதல் படம். அதன்பிறகு நூற்று எழுபது படங்களுக்கும், அறுபது தொலைக்காட்சித் தொடர்களுக்கும் மக்கள் தொடர்பாளராக பணியாற்றினேன். மொழி பெயர்ப்பாளர் சுரா தொலைந்து பி.ஆர்.ஓ. ஆனேன்.

பதினேழு ஆண்டுகாலம். மொழி பெயர்ப்பு இலக்கியம், எல்லாவற்றிலிருந்தும் வெளியேறியிருந்தேன். ஆனால் இந்த எந்திர வாழ்க்கை விரைவிலேயே வெறுத்துப் போனது. லட்சங்களில் வாழ்ந்து கொண்டிருந்த சினிமா, கோடிகளுக்குத் தாவியது. மன அமைதி கெடுகிற புதிய தயாரிப்பு முறை வந்துவிட்டதில் சினிமாவைப் போல நானும் பாதிக்கப்பட்டேன். நடிகர்களுக்கோ, தயாரிப்பாளர்களுக்கோ சோப்புப் போடத் எனக்குத் தெரியாது. மக்கள் தொடர்பாளன் பணியிலிருந்து விலகிடவும் முடியாமல் மன அழுத்தத்தால் பாதிக்கப்பட்டு, அமைதி தேடியபோதுதான் ஓஷோவைப் படிக்கும் வாய்ப்பு கிடைத்தது. நிகழ்காலம் மட்டுமே உண்மை என்ற ஓஷோவின் யதார்த்த தத்துவம் என்னை விழித்துக் கொள்ள வைத்தது. இதுவல்ல நாம், இதற்காக வரவில்லை என்ற தெளிவு பிறந்தபோது, எதிர்பாராமல் பல வருடங்களுக்குப் பிறகு இளையபாரதியைச் சந்தித்தேன். மொழி பெயர்ப்புகளுக்காகவே புதுமை பித்தன் பதிப்பகம் தொடங்க இருப்பது பற்றிச் சொன்னார். "சுரா என்பவன் வாழ்ந்தான் என்பதற்கு உனது மொழி பெயர்ப்புகள்தான் ஆதாரம்! பஷீரையும் மலையாளத்தின் ஏனைய முக்கிய எழுத்தாளர்களையும் மொழி பெயர்த்துக் கொடு" என்றார்.

"இந்த முறை வேகம் குறைந்திருந்ததே தவிர அனுபவம் கொடுத்த உத்வேகத்தில், பஷீரின் உணர்வுகளை, அவரது மொழி சிதைந்து விடா வண்ணம் மொழி பெயர்க்க முடிந்தது. மொழி பெயர்த்த பிறகு பிழை திருத்தும்போது கூட அழ வைத்தன அவரின் படைப்புகள். மொழி பெயர்ப்புகள், புத்தகங்களாகி சாரிசாரியாக வெளிவந்ததைக் கண்டு, வீழ்ந்த உடல் நலம் கூட எழுந்து கொண்டது. நான் இத்தனை வேகமாக மொழி பெயர்ப்பது எனக்கே வியப்பூட்டுகிறது. பஷீரின் ஆத்மா எனக்குள் புகுந்து கொண்டு இயக்குகிறதோ என எண்ணுகிறேன். காரணம் பஷீர் அழுதால் நான் அழுகிறேன். அவர் சிரித்தால் நான் சிரிக்கிறேன். பஷீரை நான் நேரில் சந்தித்த இல்லை. ஆனால் பஷீருக்கு இணையான எழுத்தாளர் தமிழில் இல்லையே என்று ஏங்குகிறேன். பஷீரின் எஞ்சிய படைப்புகளையும் இந்த ஆண்டு இறுதிக்குள் மொழி பெயர்த்து முடித்து விடுவேன்." என்று சொல்லும் சுரா மலையாளத்திலிருந்து எம். முகுந்தன், ஓ.வி. விஜயன், தகழி, தற்கால எழுத்தாளர் கிரேசி போன்றோரின் படைப்புகளையும் தமிழில் மொழி பெயர்த்து வருகிறார். தவிர தாஸ்தாயெவ்ஸ்கி கதைகள், உலக ஓவியன் வான்காவின் வாழ்க்கை வரலாறு என்று உலகின் சிறந்த இலக்கியங்களையும் ஆங்கிலம் வழி தமிழில் மொழி பெயர்த்து வருகிறார்.

"நீங்கள் ஏன் பி.ஆர்.ஓ. ஆக இருக்க வேண்டும். அது வேண்டாம் என்கிறார்கள் எல்லோரும். எனக்கும்கூட மொழி பெயர்க்கும் சுராதான் பிடித்திருக்கிறது.

"இனி எனது எஞ்சிய வாழ்நாளை மொழி பெயர்ப்புக்காகவே செலவிடுவேன். பஷீர் மாதிரியான படைப்பாளிகளைத் தமிழுக்குக் கொண்டு வருவேன். அது தமிழின் இன்றைய தேவை" என்று சொல்லும் சுராவை விரைவில் ஒரு கலைப்பட இயக்குனராகவும் சந்திக்கலாம்.

சந்திப்பு : **ஜெயந்த்**
படங்கள் : **வர்ஷா**

"கல்யாணத்துக்கு 'மொய்' எழுதிய கவரில் வெறும் துண்டு சீட்டு மட்டும் இருக்கே?"

"'இதுவரை என்னிடம் வாங்கி திருப்பிக் கொடுக்காத கடன் முழுவதையும் 'மொய்'னு வைச்சுக்க'னு எழுதியிருக்காரு!"

- என்.வி.ரமணி

காஞ்சனா தாமோதரன்




கூட்டம் கலைய ஆரம்பித்திருந்தது. துண்டைத் தோளில் உதறிப் போட்டவாறு தன் பூக்கடைக்குத் திரும்பிக்கொண்டிருந்தவரிடம் என்னவென்று ரஞ்சி விசாரித்தாள்.

ஒரு கல்லூரி மாணவி, எவனோ வம்பு செய்திருக்கிறான். தாங்க முடியாமல் விலகி நடந்திருக்கிறாள். அந்த வேகத்தில் சாலையைக் கவனிக்கவில்லை. அவள் மீது ஒரு கார் மோதுவதற்கு முன், இன்னொரு பெண் குறுக்கே பாய்ந்து அவளை ஓரமாய்த் தள்ளிக் காப்பாற்றியிருக்கிறாள். தள்ளிய வேகத்தில் மாணவி கீழே விழுந்து, தலையில் அடி.

பூக்கடைக்காரர் கை நீட்டிய திசையில் ரஞ்சி திரும்பிப் பார்த்தாள். அவருக்கு நன்றி சொல்லிவிட்டு நடந்தாள்.

கொஞ்ச நேரத்துக்கு முன் அவள் பூ வாங்கிய பெண் தான் காப்பாற்றியவள். இடுப்பில் குழந்தை. பக்கத்தில் அந்த மாணவி. வெள்ளைத் துப்பட்டாவால் நெற்றியை அழுத்திக் கொண்டிருந்தாள். இன்னொரு கையில் சோடா பாட்டில். துப்பட்டாவில் கசியும் ரத்தமும், கண்ணீர் வற்றிய அழுகையில் குலுங்கும் உடலுமாய், அதிர்ந்து போயிருப்பது தெரிந்தது.

பூக்காரப் பெண் ரஞ்சியை நினைவில் வைத்திருந்தாள். நடந்ததைச் சொன்னாள். உலகம் போகும் போக்கைப் பற்றி உண்மையாகவே கவலைப்பட்டாள்.

துப்பட்டாவை விலக்கி அந்தப் பெண்ணின் நெற்றிக் காயத்தைப் பார்த்தாள் ரஞ்சி. சாதாரணக் காயம் இல்லை. ஆறேழு தையல்களாகவது தேவைப்படும் ஆழமான வெட்டு. விழுந்த கல் கூர்மையானதாய் இருந்திருக்க வேண்டும். நல்லவேளையாகக் கண் தப்பித்தது. அனுகாவுக்கும் இதே போல் ஒரு வெட்டு சின்ன வயதில் ஏற்பட்டது இன்னும் நினைவில் இருந்தது.

இந்தப் பெண் உடனடியாக மருத்துவரைப் பார்த்துத் தையல் போட்டுக் கொள்ள வேண்டும். ரஞ்சி செல்ஃபோனை எடுத்தாள். மாணவியிடம் அவள் பெயர், வீட்டு எண் விவரங்கள் கேட்டாள். பெயர் செல்வி. பொறியியல் கல்லூரியில் இரண்டாம் வருடம். கல்லூரி ஹாஸ்டல் வாசம். உலர்ந்த உதடுகளின் வழியே குரலாக இல்லாமல் காற்றாக வார்த்தைகள் வந்தன. முகம் செத்துப் போயிருந்து.

"ஆழமான வெட்டு. ஆஸ்பத்திரிக்குப் போணும், செல்வி. எங்கூட வர்றியா?"



தெரியாதவர்கள் கூப்பிட்டால் போகாதே என்று அனுகாவுக்கு எப்போதோ உபதேசம் செய்தது ஞாபகம் வந்தது. 'பிஸினஸ் கார்ட்' காண்பித்தாலுமே இந்தப் பெண்ணால் அவளை எப்படி நம்ப முடியும். என்ன செய்வது.

"போம்மா கண்ணு." பூக்காரப் பெண்ணின் பரிந்துரை.

செல்வியைப் பார்த்தாள். "உன்னாலே நடக்க முடியுமாம்மா?"

செல்வி நடக்க முடியும் என்று தலையசைத்தாள்.

பூக்காரப் பெண் ரஞ்சியை நிற்கச் சொன்னாள். முன்பு வாங்கின பூவெல்லாம் மண்ணில் விழுந்து நசுங்கிப்போனதே என்றாள். பூக்கூடையிலிருந்து ஒரு கதம்பப்

பந்தை எடுத்தாள். "மவராசியா இருப்ப" என்று பணத்தை மறுத்தாள். ரஞ்சி பூ வாங்க நீட்டிய கையில் குழந்தை தன் கையைக் கொடுத்துச் சிரித்தது. பணத்தை அதன் பிஞ்சுக் கையில் திணித்தாள். இந்தக் குழந்தையின் சிரிப்பும் அதன் தாயின் சிரிப்பும் என்றுமே மனத்துள் வாடாது. ஆஸ்பத்திரியில் காத்திருந்து தையல் போட்டு, தங்கையின் ஃப்ளாட்டுக்கு வரும் வரை செல்வி ஒன்றும் பேசவில்லை. சாப்பிடுவதாய்ப் பெயர் பண்ணிய போதும் மௌனம். உடலில் மெல்லிய நடுக்கம். சாப்பாட்டின் நடுவில், மேசை மேல் தலையைக் கவிழ்த்து அழுதாள். ஓசையே இல்லாமல் உடம்பு குலுங்கியது. தங்கை அவளை அழைத்துப் போய்ப் படுக்கச் செய்தாள். கண்ணீர் காய்வதற்குள் கருவறைக் குழந்தை போல் சுருண்டு தூங்கிப் போனாள் அவள்.

படுக்கையின் பக்கத்தில் நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்தாள் ரஞ்சி. ஜன்னலுக்கு வெளியே இலைகளை அசைக்காமல் நின்ற மாமரத்தைப் பார்த்தாள். செல்வி, அனுகாவை விட இரண்டு வயதுதான் பெரியவள் என்பது நினைவில் தைத்தது.

செல்வி படுக்கை மேல் எழுந்து உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு இன்னொரு காபி கொண்டு வந்தாள் தங்கை. செல்வியைப் பார்த்துத் தலையாட்டி மெல்லப் புன்னகை செய்தாள். வெளியேறினாள்.

"மேடம், என்னால உங்களுக்கும் உங்க தங்கச்சிக்கும் ரொம்பக் கஷ்டம்."

"அதெல்லாம் இல்லை. மேடம் வேண்டாம். அம்மா, மாமி, ரஞ்சி, ஆண்ட்டி ஏதாவது சொல்லு."

கண்ணீர்க் கறைகளின் நடுவே மெல்லிய புன்னகை. "பேர் சொல்லிக் கூப்பிட வராது. மேடம்...ஆண்ட்டி."

ரஞ்சி பதிலுக்குப் புன்னகை செய்தாள். அதிர்ச்சியின் மரப்பு கொஞ்சம் குறைந்திருக்கிறது இவளிடம்.

"பேசணும்னு இருக்கா?"

செல்வி வெகு நேரம் பேசவில்லை.

"தப்பு செஞ்சிட்டேன். தனியா ரோட்ல போயிருக்கக்கூடாது."

இவள் தன் மேல் முழுப் பழியையும் போட்டுக்கொள்கிறாள். ஒரு வகையில், இது ரஞ்சி எதிர்பார்த்ததுதான்.

பேசிப் பழகும் முறையிலும், நிர்வாகம் செய்யும் முறையிலும் பெண்களுக்கும் ஆண்களுக்கும் இடையே நிறைய வித்தியாசங்கள்; அதனால் இருபாலாரும் வேலை செய்யும் நிறுவனச் சூழலில் ஏற்படும் சிக்கல்கள்; அவற்றை ரஞ்சி போன்ற மேல்மட்ட அதிகாரிகள் அணுக வேண்டிய முறைகள் எல்லாம் பற்றிய நிறுவனப் பயிற்சி நினைவுக்கு வந்தது. ஒரு வர்த்தகப் பிரச்னை ஏற்பட்டால் கூட பெண்களில் பெரும்பான்மையோர் தங்கள் மேல்தான் முதலில் பழி போட்டுக்கொள்கிறார்கள். சூழலில் தவறு இருக்கலாமோ என்று முதலில் கேட்கத் தோன்றுவதே இல்லை. இது கலாசார வித்தியாசங்களைத் தாண்டிய பொதுத் தன்மையாக இருக்கிறதே. ஏன்?

எவனோ ஒருவன் தன்னை வழிமறித்துக் கொச்சையாகப் பேசியதற்கு, இந்தச் சிறு பெண் தன்னையும் காரணமாக்கிக் கொள்கிறது. மானக்குறைவு என்று விஷயத்தைப் பார்க்கிறது. இந்தப் பெண்ணுடலில் பிறந்து விட்டோமே என்று மனம் கூசுகிறது. அந்த உடலும் கூனிக் குறுகிக் கொள்கிறது. மீண்டும் கருவறைக்கே திரும்பிப் போய்க் கரையலாமே என்று நினைக்கிறது. இந்த இளம் பெண்ணின் சுயமரியாதையைக் குறைக்கும் நுணுக்கமான வக்கிரம் இது. எதனால்?

'மற்றவர்களுக்கு இடைஞ்சலாக இல்லாத பட்சத்தில், ஒரு பொது இடத்தில் நிம்மதியாகப் பேசிப் புழங்கச் சம உரிமையுள்ள பிரஜைதான். அந்த அடிப்படை ஜன

**"ஆனாலும் புதிதாகப் படம் எடுக்கப் போற உங்களுக்கு இவ்வளவு அவநம்பிக்கை கூடாது, சார்...!"**

**"எப்படி கண்டுபிடிச்சீங்க...?"**

**"அதான் படத்துக்குத் தலைப்பு 'வெற்றிகரமான மூணாவது நாள்'-னு வச்சிருக்கீங்களே...!"**

**- ஆர். சந்திரசாமி**



நாயக உரிமை, ஒருவனால் இன்று என்னிடமிருந்து பறிக்கப்பட்டது. அவன் இருக்கும் சமூகத்தின் ஒரு பகுதியாக நானும் இருக்கிறேன். ஆனால், அவன் தவறுக்கு நான் பொறுப்பாளி இல்லை! இப்படி இவளால் நினைத்துப் பார்க்க முடியுமா. முடியும். என்றாவது ஒரு நாள். ஆனால், இப்போது இவள் இருக்கும் மனநிலை வேறு.

''செல்வி, நான் ஒண்ணு சொன்னா கேட்பியா?''

''ம்ம்ம்ம்...''

''உம்மேல தப்பு இல்லை.'' ரஞ்சியின் வார்த்தைகள் அவளுக்கே வெறுமையாகக் கேட்டன. பிரச்னைகளுக்குத் தீர்வு ஒரே நாளில் வரப் போவதில்லை. ஆனாலும், இப்போது இவளுக்கு இந்த வார்த்தைகள் தேவை. அனுகாவிடம் போல் வெளிப்படையான பேச்சே நல்லதோ. ''செல்வி, அவமானம்னு நினைக்கிறியா?''

''ஆண்ட்டி...'' குரல் மீண்டும் இளகியது. ''உடம்பெல்லாம் கூசுது, ஆண்ட்டி...''

''தெருவிலே போனவன் என்னமோ சொன்னதுக்காக உன்னை நீயே தாழ்வா நினைக்காதே. நான் சொல்றது புரியுதா?''

அவள் தலையாட்டலில் பாதிப் புரிதல் தான் இருந்து. மீதியைத் தானே நினைத்துப் பார்க்கட்டும். பேசவே சங்கடப் படுகிறாள்.

''உன் அம்மாகிட்டே பேசுறியா?''

அவள் முகத்தில் பயம் அப்பியது. ''ஐயோ வேண்டாம், ஆண்ட்டி. எஞ்சினியரிங் படிக்க ஹாஸ்டல்ல விட்டிருப்பதே பெரிசு. மூட்டையைக் கட்டு, ஊருக்கு வான்னுவாங்க.''

ஹாஸ்டலுக்குப் போய் வார்டனிடம் கதையைச் சொல்லி, செல்வியை இறக்கி விட்டாள். திரும்பும் வழி முழுவதும் செல்வியின் அழுது வீங்கிய முகம்தான் நினைவில் வந்தது. நாளைக்குத் திருவனந்தபுரம் போய் ராஜியையும் விதுவையும் சந்திப்பது முக்கியமாய்த் தெரியவில்லை; அவர்களை யு.எஸ்.ஸிலேயே பார்த்துக்கொள்ளலாம். நாளைக்குக் கூப்பிட்டுச் சொன்னால் போதும். வருத்தப் படுவார்கள். செல்ஃபோனில் செல்வியைக் கூப்பிட்டாள். நாளை அவளை வந்து சந்திக்கலாமா என்றாள். செல்வியின் குரலில் உயிர்ப்பு தெரிந்தது.

''நிச்சயமா, ஆண்ட்டி.''

இரவு தூங்குவதற்கு முன், செல்வியுடன் பேசியதிலிருந்து கேள்வி-பதில் ஒன்றை



''தூண்டுகோல்'ங்கிற உங்க சீரியல்லே ஹீரோவைப் பாதியிலேயே கொன்னுட்டீங்களே... ஏன்...?''

''நேயர்களோட 'வேண்டுகோள்'தான் காரணம்!''

- தஞ்சை தாமு



மனம் 'ரீவைன்ட்' செய்தது.

''இது செக்ஷுவல் ஹராஸ்மென்ட், செல்வி. சட்டம் இருக்குமே?''

''வரதட்சிணை வாங்கக் கூடாதுன்னும் கூடத்தான் சட்டம் இருக்கு, ஆண்ட்டி.''

ரஞ்சி யு.எஸ்.ஸை நினைத்துப் பார்த்தாள். பெண்ணுக்கும் உரிமை கோருவது 150 வருடத் தொடர்ச்சி உள்ள இயக்கம் அங்கே. முன்னேற்றங்களுடன் சேர்ந்து பல சிக்கல்கள், தடைகள். ஒரே வேலையைச் செய்யும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே சம்பளம் என்கிற சட்டம் போட்டுக் கிட்டத்தட்ட நூறு ஆண்டுகள் இருக்கும். ஆனாலும், பல நிறுவனங்கள், அறிவு ஜீவிப் பல்கலைக் கழகங்களில் இந்தச் சட்டத்தை இன்னமும் கூட முழுமையாகச் செயல்படுத்த முடியவில்லை. சட்டம் இயற்றுவது யார் பொறுப்பென்று தெரியும். அதை நிறைவேற்ற வேண்டியது யார் பொறுப்போ?

அன்று சரியான தூக்கமில்லை.

அடுத்த நாள், செல்வி கொஞ்சம் மலர்ச்சியுடன் தெரிந்தாள். வகுப்புத் தோழர்களை அறிமுகம் செய்து வைத்தாள். மீனு என்னும் மீனாட்சி, ஜம்மு என்னும் ஜமீலா, மாயா என்னும் மாயா, ஜோ என்னும் ஜோசஃபின், ரவி, சம்பத்.

அந்தக் 'காஃபி பார்' சின்னதாக, கூட்டமில்லாமல் இருந்தது. மற்றவர்கள் காஃபிகளுடன் வருமுன் ''எப்படி இருக்கே?'' என்றாள் செல்வியிடம். செல்வியின் புன்னகை

கொஞ்சம் ஆறுதல் தந்தது. முன்பிருந்த கன்றுக்குட்டித் துள்ளல் திரும்பி வர நாளாகும். ஆனால், இவள் உடைந்து போகவில்லை.

நண்பர்கள் எல்லாரும் ஒரு மூலையில் மேசையைச் சுற்றி வட்டம் போட்டார்கள்.

"நீங்க செல்விக்குப் பெரிய ஹீரோ'!"

"ஐயோ, இப்படி ஜில் தட்டினா ஆண்ட்டிக்கு ஜுரம் வரும்." சிரிப்பு.

"செல்வியைக் காப்பாத்தின பூக்காரப் பொண்ணுதான் உண்மையிலே ஹீரோ."

"ரௌடி மாதிரி நடந்து கிட்டா, தான் ஒரு




ஹீரோன்னு இந்தப் பசங்களுக்கு நினைப்பு."

"சீரியஸா, ஆண்ட்டி, நேத்து நடந்தது எவ்வளவு பயங்கரம்! எல்லா இடத்திலேயும்..."

"சினிமா, டீவி, புஸ்தகம், இன்டர்நெட் இப்படி எந்த மீடியத்திலேயும் இருக்கிற உதவாக்கரை ஐட்டங்களோட இன்ஃப்ளுயன்ஸ்."

"அந்த இன்ஃப்ளுயன்ஸை நம்மை மாதிரி பொண்ணுங்ககிட்டேதான் காட்டணுமா...சீ!"

"போலிங் ஆலி, காஃபி பார், வீடியோ ஆர்க்கேட் அது இதுன்னு என்னெல்லாமோ திறந்திருக்கு. ஆனா, அதுக்கெல்லாம் பணம் வேணும்..."

"போலிங் போகப் பணம் இல்லாதவன் எல்லாருமா பொண்ணுங்களை வதைக்கிறதுக்கு ரோட்டுக்கு வர்றான்? நீயும் உன் தியரியும்.."

"பார்த்தியா, நான் அந்த அர்த்தத்திலேயா சொன்னேன்? எல்லா அடிப்படையையும் கொஞ்சம் பார்க்கணும்னு சொன்னேன்."

ரஞ்சி பேச்சை மாற்றினாள். எதிர்காலம் எப்படி இருக்கும் என்பது பற்றிய விவாதம் தொடர்ந்தது.

ரஞ்சி அவர்களுக்கு உண்மைக் கதை ஒன்றைச் சொன்னாள். யு.எஸ்.ஸின் ஸ்டான்ஃபோர்ட் பல்கலைக்கழகத்துக்குப் பொறியியல் மாணவர்கள் சிலர் சேர்ந்து ஒரு 'இன்டர்நெட் ஸேர்ச் எஞ்சின்' உருவாக்கியது. பிறகு அதைச் சுற்றி ஒரு பெரிய நிறுவனத்தை உருவாக்கியது. இன்னும் பல துறைகளிலிருந்தும் வெற்றிக் கதைகளைச் சொன்னாள்.

கதைகளை உன்னிப்புடன் கேட்டுக்கொண்டிருக்கும் இளம் முகங்களைப் பார்த்தாள் ரஞ்சி. இவர்களால் தங்கள் எதிர்காலம் பற்றித் திட்டவட்டமாக எதுவும் சொல்ல முடியாது_ இன்றைய உலக நிலைமையின் பிரதிபலிப்பு. ஆனால், இவர்களிடம் அறிவும் திறமையும் நிறையவே இருக்கிறது. ஏதாவது முக்கியமாகச் செய்ய வேண்டும் என்ற ஆசையும் உற்சாகமும் துடிப்பும் இருக்கிறது.

இத்தனை நாளாய் அவளுள் அலைந்து கொண்டிருந்த கேள்விகளுக்கான பதில் மெல்ல உருப்பெற ஆரம்பித்தது.

(தொடரும்)

# குஜராத் கொடுமைகள்: பரிதலும் விடிவும்!

**ராஜ்மோகன் காந்தி**

ஜெயபிரகாஷ் நாராயணின் நூற்றாண்டு விழா சம்பந்தமாகச் சில ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, கோத்ரா ரயில் நிலைய கோர சம்பவம் நிகழ்வதற்கு ஒரு மணி நேரம் முன்னால்தான் சூரத்திலிருந்து மும்பைக்குக் கிளம்பினேன்.

தேச பிதா காந்தி, கவிஞர் நர்ஸி மேத்தா, ஜெயின் முனி ராஜ் சந்திரா, ஏழை பங்காளர்கள் ரவிசங்கர் மகராஜ் - ஜுகத்ராம் தவே, ஈசுவர அல்லா தேரே நாம் என்ற வரிகளை காந்திக்கு வழங்கிய பெயர் தெரியாத கவிஞர், இரும்பு மனிதர் சர்தார் வல்லபபாய் படேல், யு.என். தேபர், பல்வந்த்ராய் மேத்தா, மொரார்ஜி தேசாய் என்று குஜராத்தின் மறைந்த பெரியவர்கள் தொட்டு, இன்றுள்ள சாதாரணக் குடிமகன்கள் அண்டை வீட்டுக்காரர் மேல் அக்கறை கொண்டு உதவுபவர்கள் வரை அத்தனை பேரும் - உலுக்கப்பட்டிருக்கிறார்கள்.



இதில் வருத்தப்பட வைத்த விஷயம், மாநில அரசின் அசட்டையான போக்கு. பற்றி எரியும் குடியிருப்புகளைக் காக்கவோ, கொலை வெறிக் கும்பலை அடக்கவோ அரசு முற்படாமல், 'இன்னும் இந்தப் பகுதிகள் எல்லாம் எரியவில்லை, பாருங்கள்!' என்று விளக்கம் அளித்துக் கொண்டிருந்த முதலமைச்சரிடமிருந்து, பாதுகாப்புக்கான எந்தவித உத்தரவாதமும் பெற முடியாதுதான். செப்டம்பர் 11 நிகழ்வுகளுக்குப் பிறகு 'அராபிய - ஆஃப்கான்' - முஸ்லிம் இனத்தவருக்கு எதிராக எந்தக் கொடுஞ்செயலையும் அனுமதிக்க மாட்டோம்' என்று ஜார்ஜ்புஷ் முதல் உள்ளூர் அதிகாரிகள் வரை உறுதியாக இருந்த மாதிரி, குஜராத்தில் ஆளும் தரப்பிலிருந்து ஓர் எச்சரிக்கைக் குரல்கூட எழவில்லை!

பல ஆண்டுகளாகவே, குஜராத்தில் பாகிஸ்தானிலிருந்தும், இந்தியாவிலிருந்தும் ஒரு சேர வெறுப்பு ஊற்றி வளர்க்கப் பட்டிருக்கிறது. சிறுபான்மையினரின் உரிமைகள், மத சுதந்தரம், நீதி, பெருந்தன்மை ஆகியவற்றுக்காகவே வாழ்ந்த காந்தியை, அவர் நம்பிக்கைகளுக்காகவும், அவரது வெற்றிகளுக்காகவும், இந்திய மத அடிப்படைவாதிகள் வெறுத்தார்கள்.

முஸ்லிம் - ஹிந்து இருதரப்பு தீவிரவாதிகளும் காந்தி வலியுறுத்திய மதச்சார்பின்மையை இந்தியா ஏற்காது நிராகரிக்கும் என்று அன்று தொட்டே கூறி வந்தார்கள். ஜமாத் - ஏ - இஸ்லாமி நிறுவனர் மௌலானா மௌதூதி வெளிப்படையாகவே, இந்தியாவை ஒரு ஹிந்து நாடாகவும், பாகிஸ்தானை ஒரு முழு முஸ்லீம் நாடாகவும் அமைக்க விருப்பம் தெரிவித்தார். ஹிந்து தீவிரவாதிகளும் இதையே

விரும்பி ஆதரித்தனர். இதில் வெற்றி பெறாமல் போகவே, அடுத்த குறுக்கு வழியாக, காந்தியின் குஜராத்தில் வெறுப்பை உரம் போட்டு வளர்த்தார்கள். காந்தி துதித்துப் போற்றிய கருணைக் கடவுளான ராமனை, முஸ்லிம்களுக்கு எதிரான வீரனாகச் சித்திரிக்க முற்பட்டார்கள். என்ன தந்திரமான வேலை!

வெறி உமிழும் விழிகளோடு, உயர்த்திப் பிடித்த ஆயுதங்களோடு, டி-ஷர்ட்டில் ஆக்ரோஷமாக அலையும் குஜராத்திய இளைஞர் கும்பலைப் பார்த்தாலே அவர்களின் எண்ணம் புரிந்துவிடும் அளவுக்கு வெளியாகி வரும் புகைப்படங்கள், என்னைப் பொறுத்தவரை, அவர்களின் நெஞ்சில் சூழ்ந்திருக்கும் வஞ்சத்தை வெளியேற்றிவிடக் கெஞ்சுகிற மாதிரி தோன்றுகிறது. இவர்கள் எல்லாம் யார்?

இளைஞர்கள். வேலை வாய்ப்பு அற்றவர்கள். குற்றங்களுக்குத் துணை போகிறவர்கள். நவீன முன்னேற்றங்களால் பாதிக்கப்பட்டவர்கள்; அச்சுறுத்தப்பட்டவர்கள். ஏராளமான வீடியோ-ஆடியோ காசட்டுகள், துண்டுப் பிரசுரங்கள் வருடக் கணக்காக இவர்களுக்குச் சொல்லி வந்த செய்திகள்; காந்தியும் நேருவும் வளர்த்த இந்தியாவில் முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் கொழிக்க, இந்துக்கள் வலிமை இழந்து, இரண்டாம் தரக் குடிமகன்களாக வாழுகிறார்கள் என்ற மாதிரியான செய்திகள்! காந்தி அகிம்சை பற்றிப் பேசியே இருக்கக் கூடாது; அகிம்சை என்பது கோழைத்தனத்தின் அடையாளம்; மதச்சார்பின்மை என்பது தீயசொல்; மன்னிப்பது பாவம்... இப்படி! பாப்ரி மசூதி பாரதமாதாவுக்கு அவமானச் சின்னம் போல. அதை அகற்றி ராமர் கோயில் கட்டியாக வேண்டும். அதற்காக உயிரை விட்டு, தியாகியாக மாறு!' சதா இப்படி உசுப்பப்பட்டனர்.

பழங்குடியினர், தலித்துகள், பின்தங்கிய வகுப்பு இளைஞர்கள் என்று ஒரு பிரிவையும் விட்டுவிடாமல், பணத்தைக் கொட்டி, படைகள் போல கர சேவகர்களைத் தயார் செய்ய குஜராத்தில் குழுக்கள் நீண்ட காலமாக உழைத்துள்ளன. கோத்ராவில் நிகழ்ந்த கோரத்துக்கு உடனடியாக எதிர் விளைவுகளை உண்டாக்க இவை போதுமே! இதற்கெல்லாம் பணமும் வந்து குவிந்தது.

குஜராத்தின் சமூக, அரசியல் வாழ்க்கை மீதே இந்தக் கொடுஞ்செயல்கள் படிந்தன. கோத்ரா கொடுமை இதற்கெல்லாம் காரணமாகவும், தூண்டுதலாகவும் கை கொடுத்தது. நரேந்திர மோடியின் அரசு கைகட்டி வேடிக்கை பார்த்தது மட்டுமல்ல. கொடுமைகள் புரிய உதவியும் அளித்தது. ஆனால் எப்படி கோத்ரா கொடூரங்கள் செய்த கொடியவர்கள் மொத்த முஸ்லிம்களின் பிரதிநிதிகள் இல்லையோ அது போல, இந்தக் கர சேவகர்கள் குஜராத்தின் மொத்த ஹிந்துக்களின் பிரதிநிதிகள் அல்ல. பல்லாயிரக்கணக்கான ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தம்தம் மதத்தினர் செய்த கோரச் செயல்களுக்காக உண்மையிலேயே கண்ணீர் வடித்தனர். ஒருவருக்கு ஒருவர் உதவிய நிகழ்வுகளே ஆரோக்கியமான அடையாளங்கள்.

பெரிய வேலை காத்திருக்கிறது. குஜராத்தின் மிகப் பெரிய ஹிந்துப் பெரும்பான்மையினர், சகோதர சிறுபான்மையினருக்குப் பாதுகாப்புத் தருவோம் என்று உறுதி கொள்ள வேண்டும். ஹிந்து மதத்தின் சகிப்புத்தன்மையை, குஜராத் ஹிந்துக்கள் வெளிக்காட்ட வேண்டும். அடுத்தவனின் துயரம் தனது என்று கூறும் ஹிந்து மதத்தின் அடிப்படை வெளிப்பட வேண்டும். கோபம் கொண்ட ஹிந்து - முஸ்லிம் இளைஞர்களுக்கு, வேறு உருப்படியான வழிகள் காட்டப்பட வேண்டும்.

நன்றி: 'தி ஹிந்து'
தமிழ் வடிவம்: **சித்தார்த்**

---



"நேற்று எனக்கும், எங்க அப்பாவுக்கும் பயங்கர சொத்துத் தகராறு."

"உங்க அப்பாவுக்குதான் சொத்தே கிடையாதே."

" 'சொத்து ஏன் சேர்த்து வைக்கவில்லை'ன்னு கேட்டுதானே தகராறே!"

— க. சரவணக்குமார்

# அண்டை வீட்டு வம்பு



• ...இன்று

கர்நாடக மாநிலத்திலுள்ள ராய்ச்சூர் தாலுகாவில் நடைபெறும் எல்லம்மா தேவி திருவிழா மிகப் பிரபலம். பல மாநிலங்களிலிருந்தும் திரளாக பக்தர்கள் கூடிய இந்த விழாவில் அதிர்ச்சியூட்டிய நிகழ்வு, பத்தொன்பது பெண்கள் தேவதாசிகளாக மாறியதுதான். ஒன்பது வயதே ஆன யமுனவ்வா கழுத்தில் தாலியும் காலில் மெட்டியும் அணிந்து தேவதாஸியாக ஆனாள், விவரம் என்னவென்று தெரியாமலேயே!

மகளிர் அமைப்புகள் எதிர்ப்புக்குரல் கொடுத்ததையோ, காவல் துறையினர் கண்காணித்ததையோ யாரும் கண்டு கொள்ளவேயில்லை. தேவதாசிகளாகும் பெண்களை நிர்வாணமாக ஊர்வலம் அழைத்துச் செல்லும் சடங்குக்கு இரண்டு வருடங்களாக தடை விதிக்கப்பட்டு விட்டது என்றாலும் தேவதாசிகளாக மாறும் சடங்கு மட்டும் நின்றபாடில்லை. எல்லம்மா... நாகரிகம் எல்லியம்மா...?

சும்மாவே கிரிக்கெட்டுக்கு ஏகப்பட்ட மவுசு.



• சரத்குமார் அன்று...

அதுவும் 'லகான்' வந்த பிறகு உற்சாகம் டபுள் மடங்காகிவிட்டது. அதற்காக ஹாக்கி ஒன்றும் பின்தங்கிவிடவில்லை. ஏப்ரல் மாதம் வந்தாலே, 'கூர்க் கப் ஹாக்கி டோர்னமென்ட்' பரபரப்பாகி விடுகிறது. இதன் சிறப்பு என்ன தெரியுமோ? அப்பா, அம்மா, பிள்ளைகள், பாட்டி, தாத்தா, சித்தப்பா, அத்தை என குடும்பமே ஃபேமிலி மாட்சாக ஆடி மகிழ்வதுதான். பெங்களூர் அருகிலிருக்கும் 'ஹிடிகேரி' என்ற சிறிய நகரத்தில் வருடந்தோறும் நடக்கும் இந்த மேட்சில் கூர்க் இனத்தைச் சேர்ந்தவர்கள் கும்பலாய்க் கலந்து கொண்டு கலக்குகிறார்கள். 'நாட்டின் மிகப் பெரிய ஹாக்கி விளையாட்டு' என்று லிம்கா சாதனைப் புத்தகம் இந்த நிகழ்ச்சியைப் பதிவு செய்துள்ளது. இந்த வருடம் இருநூற்று ஐம்பது டீம்கள் பங்கு பெற்று அசத்தப்போகின்றனவாம். "கூர்க் மக்களுக்கு ஹாக்கி பைத்தியம் ஜாஸ்தி. இந்த டோர்னமென்டை வெறும் விளையாட்டாகக் கருதாமல், கூர்க் இனத்தவர்கள் சந்திக்கும் மேளாவாகவும் நடத்துகிறோம்" என்கிறார்கள். (இதிலும் மாட்ச் ஃபிக்ஸிங் உண்டா?)



பள்ளிக்கூடங்களில் ஒவ்வொரு வகுப்பிலும் ஏகப்பட்ட குழந்தைகள். இதில் குறும்பு கொப்பளிக்கும் வால்குழந்தைகளைச் சமாளிக்கும் ஆசிரியரின் பாடு திண்டாட்டம்தான். மறுப்பதிற்கில்லை. அதற்காக ஈவு இரக்கமில்லாமல் எட்டு மணி நேரம் பிஞ்சுக் குழந்தையை முட்டி





போட வைத்து கால், முழங்கால், முதுகெலும்பு எல்லாமே பாதிப்புக் குள்ளாகி இனி நடக்க முடியுமா என கேள்விக் குறியாக்கியுள்ள ஆசிரியைக்கு யார் தண்டனை தருவது? வைட் ஃபீல்ட் செயின்ட் டான்பாஸ்கோ பள்ளியில் யு.கேஜி படிக்கும் சரத்குமார் என்ற சிறுவனுக் குத்தான் மேற்கூறிய தண்டனை. அதுவும் வகுப்பில் பேசிக் கொண்டேயிருந்ததாலாம். தற்போது மணிப்பால் மருத்துவமனையிலிருக்கும் இவனுடைய சிகிச்சைக்காக இலட்ச ரூபாய்க்கு மேல் செலவாகியுள்ளது.

"கடந்த இரு வருடங்களில் தலைமையாசிரியை ராஜ்குமாரி இருமுறை எங்கள் மகனை மோசமாகத் தாக்கியிருக்கிறார். ஒரு முறை, அடித்ததில் தலையே வீங்கிவிட்டது. இன்னொரு தடவை, வலது கையில் அடித்ததால் ஒரு வாரத்துக்கு அவனால் எழுதவே முடியவில்லை. இப்போது ஆஸ்பத்திரியிலிருந்து அனுப்பி வைத்த பிறகுதான் போலீஸில் புகார் கொடுக்கவிருக்கிறோம். என்ன ஆக்ஷன் எடுப்பார்கள் என்று தெரியவில்லை'' என்கிறார்கள்.

ஆனால் சரத் இத்தனை உடல் உபாதையிலும் அதே ஸ்கூலுக்குத் திரும்பவும் போவதில் ஆர்வமாக இருக்கிறான். இளங்கன்றாச்சே, பயமாவது... அடியாவது!

# குடும்ப வநாக்கி!

சொல்லாமல் கொள்ளாமல் திடீர் வருகை சில சமயம் அதிர்ச்சியைத் தரும். வருகை தருபவருக்கு எதிர்கொள்பவருக்கு இருவருக்குமே ஷாக் ஏற்படுவதும் உண்டு. சமீபத்தில் கடகில் இருக்கும் குழந் தைகளின் ரிமான்ட் ஹோமுக்கு லோக் ஆயுக்தா ஜஸ்டிஸ் என். வெங்கடா சலா அதிரடி விசிட் அடித்தார். குழந்தை களின் பரிதாப நிலை கண்டு அதிர்ச்சியடைந் தார். குழந்தைகளைப் பூட்டி வைத்து, ஏகப்பட்ட அடி உதை, காயங்கள், சித்திரவதை, மிக மோச மான உணவு, அழுக்குக் குடிதண்ணீர். சிறிய அறை யில் பதினான்கு குழந்தை கள் பூட்டி வைக்கப்பட் டிருப்பதைப் பார்த்து அவர்களை விடுவித்திருக் கிறார்.

''ரிமான்ட் ஹோமில் இருக்கும் குழந்தைகள் குற்றம் புரிந்து சிறைக்கு வந்தவர்கள். இவர்களுக் குத் தண்டனை தர வேண் டாமா? அவர்களைப் பூட்டி வைக்காவிட்டால் ஓடி விட மாட்டார்களா? இங்கு யாரும் அவர்களை அடித்துத் துன்புறுத்த வில்லை. அக்காயங்களெல் லாம் பொதுமக்கள் கொடுத்தது'' என்கிறார் மகளிர் மற்றும் குழந் தைகள் வளர்ச்சித்துறை அமைச்சர் மொட்டம்மா. மாண்புமிகுவின் இந்தப் பேச்சு நமைச்சலைக் கிளப்பி விட்டிருக்கிறது. "மொட்டம்மாவின் பேச்சு பொறுப்பற்றதாக இருக் கிறது. சீர்திருத்த நியரி பற்றியோ, சட்டத்தைப் பற்றியோ இவருக்கு அறிவு இருக்குமா என்பது சந்தேக மாக இருக்கிறது'' என் கிறார் ஜஸ்டிஸ் வெங் கடாசலா. குழந்தைகள் உரிமைக்கென இயங்கும் பல்வேறு அமைப்புகள். அமைச்சரின் பொறுப் பற்ற பேச்சை எதிர்த்துப் போராட்டத்தில் குதித் திருக்கின்றன.

- லதா சேகர்

தமிழக சட்டமன்றத்தில் தி.மு.க. மற்றும் அதன் கூட்டணிக் கட்சிகளுக்கு உள்ள பலத்தில் ஒரு ராஜ்ய சபை உறுப்பினரை மட்டுமே தேர்ந்தெடுக்க முடியும். அந்த வகையில் தி.மு.க. சார்பில் வழக்கறிஞர் சண்முகசுந்தரம் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறார். இந்த ஒரு இடத்துக்கு தி.மு.க.வில் பத்து பிரமுகர்கள் போட்டியிட்டார்கள். பழைய எம்.பி., பழைய எம்.எல்.ஏ. என்று எல்லோரையும் ஒதுக்கி விட்டு ஆலந்தூர் பாரதி, முன்னணியில் இருந்தார். கலைஞருக்கு "சுப்புலட்சுமி ஜெகதீசனுக்கு கொடுக்கலாம்" என்ற அபிப்ராயம் இருந்தது. ஆனால் திடீரென்று களத்தில் சண்முகசுந்தரம் குதித்ததற்கு காரணம் மாறன் அவர்களின் பலமான சிபாரிசுதானாம். சென்னையில் தனிக்கோர்ட், மற்றும் உயர்நீதி மன்றத்தில் நிலுவையில் இருக்கும் ஜெயலலிதா சம்பந்தப்பட்ட வழக்குகள் அடுத்த நான்கு வருடங்களில் சுப்ரீம் கோர்ட்டுக்கு வருவதற்கான வாய்ப்பு இருப்பதாலும், டான்ஸி வழக்கு மேல் முறையீட்டு மனு உடனடியாக விசாரிக்கப்பட இருப்பதாலும் சண்முகசுந்தரம் போன்ற சீனியர் வழக்கறிஞர்கள் தில்லியில் இருக்க வேண்டும் என்று மாறன் நினைக்கிறாராம். சண்முகசுந்தரம் செலக்ஷனுக்கு இதுதான் காரணம். ஆனால் "ஆக்டிவ்வாக கட்சிக்கு பாடுபடும் ஒரு பிரமுகருக்குக் கொடுத்திருக்கலாம்" என்று உடன்பிறப்புகள் சொல்கிறார்கள்.



## காதில் விழுந்தவை

சட்டப்படி அரசிடமிருந்து தகவல் பெறும் உரிமை எல்லோருக்கும் உண்டு. ஊழல் ஒழிப்பு இயக்கம் என்ற அமைப்பு ஜெ. அரசின் புதிய வீராணம் திட்டம் பற்றிய அடிப்படைத் தகவல்களை அரசிடம் கேட்டது. ஆனால் "டெண்டர் விட்டு, வேலைக்கான உத்தரவும் போடவிருக்கின்ற நிலையில் எந்தத் தகவல்களையும் தரமுடியாது" என்று அரசு மறுத்து விட்டதாம். 'வீராணம் திட்டம் கொஞ்சம் கூட சாத்தியமில்லாத திட்டம். தமிழக அரசியல்வாதிகள் தங்கள் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள வீராணம் அல்லது கூவத்தைச் சுத்தப்படுத்தும் திட்டம் ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் இந்தத் திட்டங்களை பற்றிச் சொன்னால் உலக வங்கியின் கதவும் உடனே திறப்பது தான் ஆச்சர்யம்" என்கிறார்கள் ஊழல் எதிர்ப்பு இயக்கத்தினர்.

தமது சட்டமன்ற அலுவலகம் தாக்கப்பட்டதைப் பார்வையிடச் சென்ற கலைஞர் திடீரென்று உண்ணாவிரதத்தைத் துவங்கிவிட்டார் என்கிறார்கள். அப்படி அவர் துவங்கப் போவது பல முக்கியப் பிரமுகர்களுக்கே தெரியாதாம். இதற்கிடையில் சேப்பாக்கம் தொகுதி உட்கட்சிப் பிரச்னையைத் தாக்குதலுக்குக் காரணமாகப் போலீஸ் சொல்வதைக் கழகத்தில் பொருட்படுத்தாவிட்டாலும், அங்கு மோதல்கள் நடப்பதை, கழகத் தலைமை உணராமல் இல்லையாம். குறிப்பாக, பகுதி இளைஞரணி செயலாளர் எல். ராஜேந்திரனுக்கும் பகுதிச் செயலாளர் சுரேஷ் குமாருக்கும் ஏழாம் பொருத்தம். இதில் பகுதிச் செயலாளருக்கு, கலைஞரின் கடைசி மகன் ஆதரவும் உண்டாம்.



# மீண்டும் மூவேந்தர்கள்!



தமிழகம் மூன்று மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டுவிட்டது. தென் தமிழ்நாட்டு மாவட்ட ஆட்சியாளர்கள் எந்த ஒரு காரியத்தையும் தினகரனைக் கலந்து செய்ய வேண்டுமாம். அதுபோல தஞ்சை சுற்று வட்டாரம் சசிகலாவின் சகோதரர் சுந்தரவதனத்தின் ஆளுகையிலும், வடதமிழ்நாடு தினகரன் சகோதரர் பாஸ்கரன் கட்டுப்பாட்டிலும் விடப்பட்டுள்ளதாம். இவர்கள் அனைவருக்கும் பொதுவான ஆலோசகர் தோழியின் கணவர் என்கிறார்கள்.

— சஞ்சயன்

படங்கள் : சௌரா

# “ரஜினியின்




அழகான பின்னணி இசையில் 'சாந்தாகாரம் புஜக சயனம்' (மஹாவிஷ்ணு ஸ்தோத்ரம்)' ஓம் விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ...' (விஷ்ணு சகஸ்ரநாமம்) 'கௌசல்யா சுப்ரஜா' (வெங்கடேச சுப்ரபாதம்) போன்ற ஸ்லோகங்களை, ஸ்ரீனிவாஸ‌னும், 'பச்சை மாமலை போல்மேனி', 'மாலே மணிவண்ணா' பாடல்களை பாம்பே ஜெயஸ்ரீயும் பாடி வசீகரிக்க, 'மஹா விஷ்ணு' ஒலி நாடாவை, கிரியா கிரியேடிவ் சவுண்ட் நிறுவனம் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறது.

இந்த காஸெட்டின் சிறப்பம்சம் என்ன தெரியுமா? இது குழந்தைகளுக்காக விசேஷமாகத் தயாரிக்கப்பட்டது.

திருமாலின் தோற்றம், அவதாரம், திருக்கோயில்கள், சுலோகங்கள் என சுவையாகவும், பக்திபூர்வமாகவும் இருக்கும் இந்த காஸெட்டுடன், படிக்கவும் வசதியாக ஸ்லோகப் புத்தகம் ஒன்று இலவசமாக இணைக்கப்பட்டுள்ளது. 'தீபக்தேவ்' என்ற புதியவர் இசையமைத்திருக்கிறார்.

இந்த காஸெட்டில் துளசிதளம் ஒன்று, விஷ்ணுவின் பெருமைகளைச் சொல்வது போல அமைத்திருக்கிறீர்களே அதற்குத் தனிப்பட்ட காரணம் உண்டா?

“ரொம்ப லெக்சர் அடிக்காமல், பர்சனல் டச்சுடன் யாராவது கதை சொன்னால் இன்னும் சுவாரசியம் கூடும் என நினைத்தோம். அதற்கு, மகாவிஷ்ணுவை எப்போதும் பிரியாது இருக்கும், சங்கு, சக்கரம், ஆதிசேஷன் போன்ற காரெக்டர்களைச் சொல்ல வைக்கலாம் என்றாலும், இளம் பெண்ணின் குரலாக இருந்தால் இன்னும் எடுபடும்

என்பதால் துளசியே பேசுவது போல வடிவமைத்தோம். 'மை லார்ட்', 'மை மாஸ்டர்' என பெருமிதத்தோடு சொல்லும்போது, மகிமை கூடுகிறதல்லவா?''

''ஆங்கிலத்தில்

இருக்கிறார்கள்? அவர்களுக்கு உதவத்தான் இந்த காஸெட்!''

இந்த காஸெட்டைக் கேட்டு நிறைய பேர் பாராட்டினார்கள் என்றாலும், ஸ்ரீநிதி பொக்கிஷமாக நினைப்பது ரஜினிகாந்தின் பாராட்டைத்தானாம்.

'' 'ரொம்ப நல்ல காரியம் பண்ணியிருக்கீங்க.



# ாராட்டுப் பெற்றேன்!''

காஸெட்டைக் கொண்டு வந்தது ஏன்?''

''இந்திய மார்க்கெட்டை மனத்தில் கொண்டு ஆங்கிலத்தில் தயாரித்திருக்கிறோம். அடுத்ததாக, எல்லா பிராந்திய மொழிகளிலும் தயாரிக்கும் எண்ணம் உள்ளது.''

''முதல் முயற்சியே குழந்தைகளுக்காக என அமைத்தது ஏன்?''

''சின்ன குழந்தைகளுக்காக என்பதைவிட, இளைய சமுதாயத்துக்காக என்று சொல்வதுதான் பொருந்தும். கூட்டுக் குடும்பம் அழிந்து வரும் இன்றைய நிலையில், குழந்தைகளுக்கு நல்ல கதைகள் சொல்ல வீட்டில் யார்

வியாபார நோக்கில் செய்யாமல், நல்ல எண்ணங்களைத் தூண்டி விடற மாதிரி, இந்த காஸெட் இருக்கு. உங்க முயற்சிக்கு என் பாராட்டு'னு ரொம்ப உற்சாகப்படுத்தினார்.''

''அப்போ, உங்க நாட்டியம்?''

''அது ஒரு பக்கம் நடந்துக்கிட்டிருக்கும். இது இன்னொரு பக்கம். ஆத்ம திருப்திக்குனு வைச்சுங்கோங்களேன்'' என்று புன்னகை செய்தார் ஸ்ரீநிதி.

— மடிப்பாக்கம் வெங்கட்

### மேஷம்

கிரகங்கள் உங்களுக்குச் சாதகமா இருக்கிறதால உங்க திறமை வெளிப்படப் போகுது. நண்பர்கள் உறவினர்களால நன்மை கிடைக்கும். சட்டம், காவல், இராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்பு உண்டு. வாழ்க்கை வசதிகள் அதிகரிக்கப் போகுது. கேளிக்கை, உல்லாசம், விருந்து உபகாரங்களில் ஈடுபாடு அதிகமாகும். யார்ட்டயும் அவசரப்பட்டு வாக்கு கொடுக்க வேண்டாம். குரு பலம் குறைஞ்சு இருக்கறதால பண விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. பயணம் தவிர்க்கறது நல்லது.

### ரிஷபம்

உங்களோட வசிகர சக்தி கூடப் போகுது. நீங்களே உங்களைப்பார்த்துப் பொறாமைப்படுவீங்க. குடும்பதுல மகிழ்ச்சி கடல் போல இருக்கும். வீட்ல சுப நிகழ்ச்சிகள் நடக்க சந்தர்ப்பம் வரும். வேலை இல்லாம இருக்கறவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு தேடி வரும். வேலையில இருக்கறவங்களுக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் போன்ற பலன் உண்டு. அரசியல்வாதிகளுக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்பு வரலாம். எதிலயும் அவசரம் பதற்றம் வேண்டாம்.

### மிதுனம்

இந்த வாரம் எந்தக் காரியத்தையும் துணிச்சலோடு செய்து முடிப்பீங்க. எதிர்ப்புகள் குறையும் எதிரிகள் ஓடிப் போய்டுவாங்க. சிவப்பு நிற பொருட்களால ஆதாயம் வரும். என்ஜினீயர்கள், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கோர்ட், வழக்கு விவகாரங்கள்ல வெற்றி பெற வாய்ப்பிருக்கு. பொருளாதார நிலை சாதாரணமாகத் தான் இருக்கும். எதிர்பாராத செலவுகள் இம்சை பண்ணும். உஷார். பயணம் தவிர்ப்பது நல்லது.

### கடகம்

புதிய சொத்துக்கள் சேர வாய்பிருக்கு. வழக்கு விவகாரங்கள் போட்டி பந்தயங்கள்ல வெற்றி காணலாம். எழுத்து, கணிதம், பத்திரிகை போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க வளர்ச்சி காண்பாங்க. கணவனால் மனைவிக்கும், மனைவியால் கணவனுக்கும் பரஸ்பரம் அனுகூலம் உண்டாகும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு. மக்கள் நலன்ல கொஞ்சம் கவனம் வையுங்க. அரசு விவகாரங்கள்ல பிரச்னை வரலாம். எல்லார்ட்டயும் சுமுகமாகப் பேசிப் பழகினா சண்டைகளிலிருந்து தப்பலாம்.

### சிம்மம்

இந்த வாரம் பொருளாதார நிலை உயரப் போகுது. பணம் இருந்தால்தான் போதுமே. மகிழ்ச்சி தானாக வந்து ஒட்டிக் கொள்ளும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடி வரும். பல வழிகள்ல இருந்து பணம் வந்து பாக்கெட்டை நிரப்பும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் வரும். பெண்கள் புதுசா உடைகள், நகைகள் வாங்குவாங்க. வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும். எதிர்பார்த்திருந்த முக்கியமான செய்தி இப்ப வந்து சேரும். அம்மாவ்ாலும், அம்மாவழி உறவினர்களாலும் சிறு சிறு பிரச்னைகள் வந்து விலகும்.

### கன்னி

முக்கியமானவங்க தொடர்பால உங்களுக்கு ஒரு சில நன்மைகள் கிடைக்கும். துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடும். எதிர்ப்புகள் இருக்காது. நண்பர்கள் உதவ முன்வருவாங்க. பெண்களுக்கு மாமூலான பலன்கள் பாதிக்காது. கூடப் பிறந்தவங்களால பிரச்னைகள் வரலாம். அப்பாவோட உடல் நலத்துல கவனம் வைக்கிறது நல்லது. வெளியூர் பயணம் இப்ப வேண்டாம். மாணவர்கள் உழைப்புக்குரிய பயனை அடைவாங்க எதிலயும் அவசரம் பதற்றம் வேண்டாம்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



விருச்சிக ராசிக்காரரான ரம்பாவுக்குப் புதிய ஒப்பந்தம் வருமாம்.

## துலாம்

இந்த வாரம் உங்க மதிப்பும் அந்தஸ்தும் உயரப் போகுது. முக்கியமான எண்ணங்கள் திட்டங்கள் நிறைவேறும். மனசுக்கு உற்சாகமான தகவல் ஒண்ணு இப்ப வந்து சேரும். புத்திசாலித்தனம், சாமர்த்தியம் அதிகரிக்கும். பண வரவுக்குப் பஞ்சமில்லை. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டு. கணவன் மனைவிக்குள்ள சிறுசிறு சலசலப்பு வந்து போகும். விட்டுக் கொடுத்துப் போறது நல்லது. உழைப்பும் அலைச்சலும் அதிகரிக்கும். குடும்பத்துல நல்ல காரியம் நடக்க வாய்ப்பிருக்கு.

## விருச்சிகம்

மனசுல துணிச்சல் அதிகரிக்கும் எடுத்த காரியத்தைத் தலைகீழா நின்னாவது முடிச்சுடுவீங்க. சிலர் புதிய சொத்துக்கள் வாங்கலாம். வழக்கு விவகாரங்கள்ல அனுகூலமான போக்கைக் காணலாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய ஒப்பந்தங்கள் வரலாம். சுபகாரியங்களுக்காக செலவுகள் செய்ய நேரிடலாம். புதிய முயற்சிகள். முதலீடுகள் இப்ப வேண்டாம். முன்ன பின்ன தெரியாதவங்கிட்ட அதிகமா வாய் கொடுக்க வேண்டாம்.

## தனுசு

'உங்க மதிப்பு அந்தஸ்து செல்வாக்கெல்லாம் உயரப் போகுது. குடும்பத்துல மகிழ்ச்சி பொங்கும். உடன் பிறந்தவங்க உதவ முன் வருவாங்க. பெண்கள் புதிய ஆடை, நகைகள் வாங்க வாய்ப்பிருகு. முக்கியமான திட்டங்கள், எண்ணங்கள் இப்ப நிறைவேறும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி காணலாம். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் வரும். வியாபாரிகள் அகல கால் வைக்க வேண்டாம்.

## மகரம்

உங்க முகவசீகரம் அதிகரிக்கும். பளிச்சுனு தெரிவீங்க. தகவல் துறையைச் சேர்ந்தவங்க வளர்ச்சி காண்பாங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு. பக்தி மார்க்கம் பக்கம் ஈடுபாடு அதிகரிக்கும். வீடு, வாகனம், நிலம் ஆகியவற்றின் மூலமா ஆதாயம் கிடைக்கும். தந்தையால் அனுகூலம் உண்டு. மக்கள் நலத்துல கவனம் தேவை. பணம் கொடுக்கல் வாங்கல்ல விழிப்போட இருக்கறது நல்லது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும்.

## கும்பம்

இந்த வாரம் மதிப்பும் அந்தஸ்தும் உயரும். பேச்சிலே இனிமை இருக்கும். விருந்து உல்லாசங்கள்லே பங்கேற்க வாய்ப்பு வரும். கொடுக்கல் வாங்கல் லாபம் தரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி உண்டு. ஆண்களுக்குப் பெண்களால் நல்லது நடக்கும். குடும்பத்திலே சுப நிகழ்ச்சிகள் நடக்க சந்தர்ப்பம் வரும். வீண் அலைச்சலைத் தவிர்க்க முடியாது. எதிலேயும் அவசரம் பதற்றம் வேண்டாம். வீண் வம்பு தும்புகள்ல தலை காட்ட வேண்டாம்.

## மீனம்

உங்க அறிவாற்றல் கூடும். கலைத் திறமை பிரகாசிக்கும். புதிய பொருள் சேர்க்கை ஏற்படும். கலைத்துறையைச் சேர்ந்தவங்க தங்கள் எண்ணம் நிறைவேறப் பெறுவாங்க. பயணத்தால நன்மை உண்டு. யார்ட்டயும் கடுமையாப் பேச வேண்டாம். சுமுகமாப் பழகி வருவது நல்லது. இயந்திரப் பணியாளர்கள் என்ஜினியர்களுக்கெல்லாம் வளர்ச்சி உண்டு. செலவுகள் எகிறும். சிக்கனம் அவசியம். விளையாட்டு விநோதங்கள்ல கவனமா ஈடுபடறது நல்லது.

மார்ச் 20 முதல் 26 வரை

அக்னிசர்மா பக்கம்

குஜராத் வன்முறைகள் குறித்து, மத்திய அரசுக்கு வந்துள்ள ஒரு ரகசிய அறிக்கையில் இடம் பெற்றுள்ள தகவல்கள், பிரதமரை அதிர்ச்சிக்குள்ளாக்கியுள்ளன. முதலமைச்சர் நரேந்திர மோடியின் அமைச்சரவையில் இடம் பெற்றுள்ள நான்கு அமைச்சர்கள், வன்முறையைத் தூண்டும் விதமாக நடந்து கொண்டதாகவும், போலீஸ் கட்டுப்பாட்டு அறையில் இருந்து கொண்டே இந்த காரியத்தைச் செய்ததாகவும் அந்த அறிக்கை கூறுகிறது.



# எம்.பி. ஆவாரா இந்த அழகுப் பெண்?

அறிக்கையைப் படித்துவிட்டு, அத்வானியும் அதிர்ச்சியடைந்தாராம்.

பாலயோகியின் அகால மரணத்தை யடுத்து, காலியாகியுள்ள அமலாபுரம் பாராளுமன்றத் தொகுதியில் இடைத்தேர்தல் வந்தால் யாரை நிறுத்துவது என்று சந்திர பாபு நாயுடு முடிவு செய்துவிட்டார். அவரது சாய்ஸ், பாலயோகியின் மனைவி. அதே போல, சபாநாயகர் பதவிக்கும் தெலுங்கு தேசம் சார்பில் எர்ரான் நாயுடு பெயரைச் சிபாரிசு செய்யவிருக்கிறார் நாயுடுகாரு.

அண்மையில், உலக அழகி, பிரியங்கா சோப்ரா, மகப்பேறு மருத்துவமனையை திறந்து வைத்தார். அப்போது, 'நான் இனி இங்கே அடிக்கடி வருவேன்' என்று குறிப்பிட்டார். ஹலோ... ஏதேதோ கற்பனை செய்து கொண்டு விடாதீர்கள். பிரியங்கா சோப்ராவின் அம்மா, மகப்பேறு மருத்துவர். அம்மாவின் கிளினிக்கைத்தான் அழகுப் பெண் திறந்து வைத்தார்.



பாராளுமன்றத்தில் மகளிர் தினத்தன்று பெண்களின் நிலை குறித்து இரண்டு எம்.பி.கள் பேசியது பலரது கவனத்தையும் கவர்ந்தது. லோக்சபாவில் மம்தா பானர்ஜி, தன் பேச்சின்போது, பெண்களுக்கான இட ஒதுக்கீடு மசோதாவை எப்படியாவது விரைவில் அரசு நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ராஜ்ய சபாவில் பேசிய நடிகை ஷபனா ஆஸ்மி, சுதந்திரம் அடைந்து, இத்தனை ஆண்டுகளாகியும், நிலைமை சற்றும் மாறவில்லை. இன்னும் பள்ளி பாட

புத்தகத்தில், அம்மா எங்கே இருக்கிறாள்? சமையலறையில சமைக்கிறாள்' என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறோம் என்று ஒரு போடு போட்டார்.

சமீபத்தில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை அடுத்து டெல்லி போலீஸ், காரில் முன்புற சீட்களில் உட்காருகிறவர்கள் கட்டாயமாக சீட் பெல்ட் அணிய வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறது. சீட்பெல்ட் அணியாதவர்களைப் பிடித்து, அபராதம் விதிக்கிறது. முதல் தடவை மாட்டினால் அபராதம் நூறு ரூபாய். மறுபடி மாட்டினாலோ, முந்நூறு ரூபாய் பழுத்துவிடும்.

டெல்லியில் ஒரு துணிக்கடையில் நடந்த தள்ளுபடி வியாபாரம் மிகவும் வித்தியாசமானது. அந்தக் கடைக்கு துணி வாங்க வரும் பெண்கள் ஒவ்வொருவருக்கும், எத்தனை சதவிகிதம் தள்ளுபடி சலுகை அளிக்கப்பட்டது தெரியுமா? அவர்கள் உயரத்தைப் போல ஐந்து மடங்கு தள்ளுபடி!

வரும் ஏப்ரலில், ஜெயப்பிரதாவின் ராஜ்ய சபா உறுப்பினர் பதவிக்காலம் முடிகிறது. அவருக்கு மறுபடியும் சான்ஸ் கிடைக்காது என்பது ஒரு நியூஸ். அதைவிட பரபரப்பாக தெலுங்கு திரை உலகில் பேசப்படும் ஒரு தகவல் என்ன தெரியுமா? ஜெயப்பிரதாவுக்கு அப்புறம், எம்.பி. ஆகப் போகிறவர் ரோஜா!

அண்மையில், லாலு பிரசாத் யாதவ் தம் வீட்டுப் பூஜை அறையில் சாமி கும்பிட்டுக் கொண்டிருந்த சமயம், பீகார் மாநில உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் அவர் காதில் கிசுகிசுத்த விஷயம் கேட்டு, ரொம்ப ஆடிப் போய்விட்டார். சி.பி.ஐ.யில் பணி புரிந்த போது, லாலுவின் கேஸ்களைப் புலனாய்வு செய்து, நடத்தி, இப்போது ஓய்வு பெற்று விட்ட யு.என்.பிஸ்வாஸ், ஜார்கண்ட் மாநில கவர்னராகப் பொறுப்பேற்கப் போகிறார் என்ற செய்திதான் அது! லாலு அதிர்ச்சியடையக் காரணம், அவர் சம்பந்தப்பட்ட கேஸ்கள் எல்லாம் இப்போது ஜார்கண்ட் கோர்ட்டில்தான் நடந்து கொண்டிருக்கின்றன.

செய்தி உண்மைதானா என்று நேரிடையாக ஜார்கண்ட் முதல்வரிடமே, பேசி, அது வெறும் வதந்திதான் என்று அறிந்ததும் மனுஷருக்கு மூச்சு வந்தது.

- நியூஸ்வாலா



''வேலை நேரத்திலே தூங்கமாட்டோம்னு எங்க ஆபீஸ் ஸ்டாஃப் எல்லோரும் உறுதிமொழி எடுத்துக்கிட்டாங்க, என்னைத் தவிர..''

''நீங்க எப்படி மிஸ்ஸானீங்க..?''

''உறுதிமொழி எடுக்கிறப்ப என்னை யாரும் எழுப்பல...''

- ஆதிரை யூசுப்



''ஆவியா இருக்கறதுலே பெரிய பிரச்னை இருக்கு!''

''என்ன பிரச்னை?''

''ஆவி உலக வாழ்க்கையிலே விரக்தி ஏற்பட்டா தற்கொலை பண்ணிக்க முடியாதே!''

- அம்பை தேவா

''எதுக்கு போலீஸ் ஸ்டேஷனுக்கு எலும்பு கொண்டு போறே?''

''நேத்து மாமூல் பட்டுவாடா பண்ணினப்ப மோப்ப நாயை மறந்து போய்த் தொலைச்சுட்டேன்.''

- வி. சகிதா முருகன்





# என்ன ஆனார் எம்.கே.பாலன்?

"பயிர்களுக்குப் பாதுகாப்பு, கால்நடைகளுக்குப் பாதுகாப்பு என்று பல பாதுகாப்புத் திட்டங்களைப் பதினைந்து அம்சத் திட்டத்தில் சொல்லியுள்ளீர்கள். ஆனால் இங்கே முன்னாள் எம்.எல்.ஏக்கும் பாதுகாப்பு இல்லை; இந்நாள் எம்.எல்.ஏக்கும் பாதுகாப்பு இல்லை" என்று சட்டப் பேரவையில் தி.மு.க. எம்.எல்.ஏ. பரிதி இளம்வழுதி குற்றம் சாட்டினார். முன்னாள் எம்.எல்.ஏ. எம்.கே.பாலன் 'காணாமல்' போய் கிட்டத்தட்ட நூறு நாட்களுக்கு மேல் ஆவதைத்தான் அவையின் கவனத்துக்குக் கொண்டு வந்தார் பரிதி. உடனே இடை புகுந்த முதல்வர் ஜெயலலிதா, "சைதாப்பேட்டை தொகுதி இடைத்தேர்தல் வருவதால் அங்கு தி.மு.க.வினரிடையே வேட்பாளராக நிற்க பலத்த போட்டியுள்ளது. எனவே தி.மு.க.வினர் யாராவது கடத்திக் கொண்டு போயிருக்கலாம்" என்று பந்தை தி.மு.க. பக்கம் தள்ளிவிட்டார். அப்படியே தி.மு.க.வினர் கடத்திப் போயிருந்தாலும் கண்டு பிடிக்க வேண்டிய பொறுப்பு, போலீஸுக்கு இருக்கிறது என்பது முதல்வருக்குத் தெரியாததல்ல!

பாலன் காணாமல் போனவுடன் பலவித மான வதந்திகள் : சுதாகரன் முடக்கி வைத்துள்ள பணத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் 'அரசுப் படை' அவரது பணம், பாலனிடமும் இருக்கலாம் என்ற அடிப்படையில் கடத்திக் கொண்டு போய் விசாரிக்கிறார்கள். இல்லையில்லை... பாலனுக்கும் கட்டப் பஞ்சாயத்துக்கும் நிறைய தொடர்பு. அதன் எதிரொலிதான் இந்தக் கடத்தல்... அது கூட இருக்காது, மயிலை சாஸ்வத நிதியுடன் பாலனுக்குத் தொடர்புண்டு. அதன் விவகாரங்களில் ஏற்பட்ட மோதல் தொடர்பாகக் கூட கடத்தல் இருக்கலாம். அரசியல் ரீதியாக, ஸ்டாலினுக்கு எதிராக வாக்குமூலம் வாங்கவே இந்தக் கடத்தல் – இப்படிப் பல வதந்திகள்!

சைதை தொகுதியிலிருந்து அ.தி.மு.க. சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பாலன். 1996 அ.தி.மு.க.வின் படுதோல்விக்குப் பிறகு தி.மு.க.வில் இணைந்தார். '1991லேயே அ.தி.மு.க. சார்பில் இவர் போட்டியிட வாய்ப்பு கிடைத்தது ஓர் அதிர்ஷ்டமே. அந்தச் சமயத்தில் சைதை துரைசாமி ஆர்.எம்.வீ. பக்கம் இருந்ததால், பாலனுக்கு சான்ஸ் அடித்தது. சைதையைப் பொறுத்த வரை அங்கேயே வசிக்கும் பல பிரமுகர்கள் தி.மு.க.வில் போட்டியிடக் காத்திருக்கிறார்கள். மயிலாப்பூர் பகுதியைச் சேர்ந்த பாலன், யாருக்கும் போட்டியாக இருக்கவே முடியாது" என்று தி.மு.க. வட்டாரத்தில் அடித்துச் சொல்கிறார்கள்.

"என் தந்தை காணாமல் போய் இரண்டு நாட்கள் முதல் தகவல் அறிக்கை கூட பதிவு செய்யாமல் டபாய்த்தது போலீஸ். உயர்நீதி மன்றத்தில் ஹேபியஸ் கார்பஸ் மனு தாக்கல் செய்த பிறகுதான் கொஞ்சம் உஷாரானார்கள். ஆனால் இப்போது என் சொந்தக்காரர்கள் வீடுகளுக்கும் சென்று பாலன் எங்கெங்கே சொத்து வைத்திருக்கிறார் என்று விசாரிக்கிறார்கள். காணாமல் போனவரைக் கண்டு பிடிக்காமல் இதுபோன்று விசாரிப்பது போலீஸுக்கு வேறு நோக்கம் இருப்பதைக் காட்டுகிறது. அ.தி.மு.க.வில் இருந்த போதே சுதாகரனுக்கும் என் தந்தைக்கும் ஆகாது. எனவே அந்த வதந்தி சரியில்லை. அவ்வளவு கலபமாக யாரும் என் தந்தையைக் கடத்திப் போக முடியாது. போலீஸ்தான் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். தி.மு.க. தலைவர்களுக்கு எதிராக வாக்கு மூலம் வாங்கவே என் தந்தை கடத்திச் செல்லப்பட்டிருக்கிறார்" என்கிறார் பாலனின் மூத்த மகன் மணிமாறன்.

– கௌசி

தலம்தோறும்
தமிழ்க் கடவுள் –19
அடுத்த இதழில்.

# வட்டமேஜை



✉ மூன்று கார்ட்டூன்களும் முத்துக்கள். தலை பங்கமோ பி.ஜே.பி.க்கு சரியான பாடம்.
மும்பை, ஜான்சாமுவேல்

✉ தேன்கூட்டில், இடம் பெற்றிருந்த ஆன்மிகச் சொட்டுகள் அனைத்தும் ஏக ஆனந்தம்!
மதுரை, ஜி.ஆண்டாள்

✉ மகளிர் தினம் கொண்டாடினீர்களா? எழுத்தாளர்களின் எழுத்தோவியங்களை, பாடகி, நர்த்தகி, நடிகை என கலைகளில் முன்னணி பெண்மணிகளைக் கொண்டு விமரிசிக்க வைத்து விட்டீர்களே. பாராட்டு. விமரிசனங்கள் சுப்புடு பாணியில் நறுக்கென்று இருந்தன.
சிட்லபாக்கம், லலிதா செல்லப்பா

✉ பழந்தமிழ்ப் பாடல் ஒன்று எப்படி வரிவிதிக்கப்பட வேண்டும் என்பதை எடுத்துரைக்கிறது. மன்னிக்கவும். இடித்துரைக்கிறது. பூவிலிருந்து வண்டு தேன் உறிஞ்சுவது போல் வரிவிதிப்பு இருக்க வேண்டும். அதாவது வண்டுக்கும் தேன் கிடைக்க வேண்டும். அதே சமயம் பூவுக்கும் வலிக்கக் கூடாது. சின்ஹா இதைப் புரிந்து கொண்டால் பாரதம் வளம் பெறும்.
பாளையங்கோட்டை, தி.சு. பாலசுப்பிரமணியம்

✉ பழைய கள் புதிய மொந்தையில் என்று கூறுவதைப் போல, ஜெயலலிதா மீண்டும் முதல்வராகியும் புதிய மடம்; ஆனால் அதே விளையாட்டு, என்று தொடராமல் இருந்தால் போதுமே!
திருவண்ணாமலை,
ஆர்.ஆர்.சாமி

## பிராயச்சித்தமா சபாஷ்!

✉ புயல்கிளப்பும் பூமிகா பற்றி புலம்பியிருக்கும் கல்கியாரே! தடுப்பூசிக்கெல்லாம் கட்டுப்படாத நோயொன்று தமிழகத்தில் பரவிக் கொண்டிருக்கிறது என்று சொன்னீரே, நோயால் பாதிக்கப்பட்டவர்களில் நீரும் அடக்கம்தானே?
மயிலாடுதுறை, சச்சின் சக்திவேல்

✉ தலையங்கம் நடுநிலையானது. நாட்டு நலனையும், மக்கள் மனோ நிலையையும் எண்ணி எழுதப்பட்டுள்ளது. பி.ஜே.பி.க்கு எழுதப்பட்டது என்றாலும் எல்லா அரசியல் கட்சிகளும் பாடமாக எடுத்துக் கொள்ள வேண்டிய கருத்து.
மதுரை, தேவமைந்தன்

✉ முதல் பக்கத்திலேயே 'அம்மாவின் அம்மா' படத்தை வெளியிட்டு பல வாரங்களாக அம்மாமீது தாங்கள் செய்து வரும் அர்ச்சனைகளுக்குப் பிராயச்சித்தம் தேடிக் கொண்டீர். சபாஷ் (ம்மா)
ஆதமங்கலம் புதூர்,
கே.சண்முகம்

✉ கதைகளுக்கு விமர்சனங்களைச் 'சூடாய்' வாங்கிப் போட்டுவிட்டு எங்கள் பிழைப்பில் மண்ணைப் போட்டு விட்டீரே. நியாயமா?
சென்னை, சி.மகேஷ்

✉ சபர்மதி எக்ஸ்பிரஸ் ஸுக்கு தண்டவாளங்களில் ஒன்றை ஹிந்துவாகவும் மற்றொன்றை முஸ்லிமாகவும் காட்டிய கார்ட்டூனிஸ்ட் தாமரையின் கற்பனை, விபத்தை மறந்து ரசிக்க வைத்தது.
சென்னை, அய்யாறு வாசுதேவன்






**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**

**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**

**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**

**Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**

**Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**

**உங்கள் தலைவலிக்குக் காரணம் விலை அதிகமான மஞ்சள் பாமா ?**



*ஒவ்வொரு 10 கிராமிலும்

**வழங்குகிறோம் ஜண்டு கோல்டன் மஞ்சள் நிற பாம். தலைவலியைப் போக்கிடும், ரூ. 2.44* சேமித்திடும்.**

இப்போது ஜண்டு கோல்டன் மஞ்சள் நிற **10 கிராம்** பாமின் **விலை ரூ. 12/-**. அதே சமயம் மற்ற மஞ்சள் நிற **9 கிராம்** பாம்கள் உங்களுக்குக் கிடைக்கிறது ரூ. 13/- என்ற விலையில். ஜண்டு கோல்டன் பாம் தலைவலியைப் போக்குவதோடு உங்கள் செலவையும் குறைத்திடும். இது மட்டுமல்ல, இதை வழங்குவது ஜண்டு நிறுவனம்.

வருகை தரவும் : **www.zanduayurveda.com**

FCB•ULKA 17034 TAM

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka